ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி விழா

# ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

**திருப்பராய்த்துறை-639 115, எலமனூர் ரயில்வே ஸ்டேஷன், திருச்சிராப்பள்ளி Dt.**

அன்புடையீர்,

ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்திவிழா 1979 மார்ச்சு மீ 4ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலை 5-30 மணிமுதல் 8-30 மணிவரை இங்குக்கொண்டாடப்பெறும். நீங்கள் அனைவரும் அதில் கலந்துகொண்டு திருவருளுக்குப் பாத்திரமாவீர்களாக.

இங்ஙனம்,
**சித்பவானந்த**

## நிகழ்ச்சி முறை

**4—3—79** ஞாயிறு மாலை

5-30 மணிமுதல் 7 மணிவரை
குருகுல மாணக்கர் ஆடல், பாடல், பேச்சு முதலியன

7-30 மணிமுதல் 8-30 மணிவரை குருகுல மாணக்கர்களால்
**நபோபலன்** என்னும் நாடகம்

*தாய்மார்களுக்குத் தனி இடவசதி உண்டு. சிற்றுண்டிச்சாலை உண்டு.*

---

*ஸ்பெஷல் ரயில்வண்டி வசதி*

ஸ்பெஷல் ரயில்வண்டி திருச்சி ஜங்ஷனில் சுமார் மாலை 3-00 மணிக்கு புறப்பட்டு 4-00 மணிக்கு விழா ஆரம்பிக்குமுன் எலமனூர் வந்து சேரவும், இதே ஸ்பெஷல் ரயில்வண்டி, விழா முடிந்தபின் இரவு 9-05மணிக்கு எலமனூரில் புறப்பட்டுத் திருச்சி ஜங்ஷனை 10-15 மணிக்கு அடையவும் ஏற்பாடு செய்யப்பெற்றுள்ளது. இவ்வாறு நிறைவேற முயற்சிக்கப்படுகிறது.

---

## திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தில் அந்தர்யோகம்

1979ஞு மார்ச்சு மாதம் 6, 7, 8 தேதிகளாகிய மூன்று தினங்களில் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி இங்கு அந்தர்யோகம் நடைபெறும். இதில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் மார்ச்சு 5ஆம் தேதி இரவே நேரில் நாள் ஒன்றுக்கு ரூ. 5-00 விதம் செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்து கொள்ளவேண்டும். தாய்மார்களுக்குத் தனி இடவசதி உண்டு. பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக் குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள்.

### வாழ்க்கை முறை

**காலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 4-30 | |
| எல்லாரும் ஒன்றுகூடி நாமஜபம் | 5-00 | 5-30 |
| காவேரி ஸ்நானம் முதலியன | 5-30 | 6-30 |
| காலை தியானம் | 6-30 | 7-00 |
| சிற்றுண்டி | 7-00 | |
| காலை உபந்யாசம் | 8-30 | 9-30 |
| மௌனம் | 9-30 | 10-30 |
| பஜனை | 10-30 | 11-30 |
| பூஜை, அர்ச்சனை | 11-30 | 12-00 |

**மாலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| போஜனம், ஓய்வு | 12-00 | 2-30 |
| மாலை உபந்யாசம் | 2-30 | 3-30 |
| தனியாக வாசித்தல் | 3-30 | 4-30 |
| பானம், யோகாசனம், உலாவல், நீராடல் முதலியன | 4-30 | 6-00 |
| நாம ஜபம் ஆரத்ரிகம் | 6-00 | 6-15 |
| தியானம் | 6-15 | 7-00 |
| இரவு போஜனம் | 7-00 | |
| ஸத் ஸம்பாஷணை | 8-30 | 9-30 |
| நித்திரை | 10-00 | |

உபந்யாசங்கள் :— யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். சத் சம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம்.

# தர்ம சக்கரம்

**மாத சஞ்சிகை**

| சக்கரம் 28 | காளயுக்தி ௵ மாசி ௴ | ஆரம் 2 |
|---|---|---|

பொருளடக்கம் — பக்கம்



## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்மசக்கரப் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்துச் செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடு செய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிற வர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

இலவச சந்தா: தமிழக அரசாங்கத்தால் தமிழ்நாட்டில் 1445 பொது நூலகங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. அவை அனைத்திற்கும் தர்ம சக்கரம் இவ்வாண்டு ஆவணி மாதம் முதல் தொடர்ந்து அன்பர்களின் உதவியால் இனமாக அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம். இந்த ஞானயக்ஞத்துக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் தர்ம சக்கரம், திருப்பராய்த் துறை–639 115, திருச்சி மாவட்டம் என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 10-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# தாயுமானவர் இயற்றிய பாடல்கள்

உபநிஷதங்கள் கூறுகின்ற பரதத்துவங்கள் யாவற்றையும் தாயுமானவர் பாடல்களில் காணலாம். இவருடைய பாடல்கள் யாவும் மறைந்துபட்டுப் போகாது தமிழ் மக்கள் கைவசம் இருப்பது தமிழ் நாட்டின் தவச் செல்வமாகும். ஆத்ம சாதனத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு இவருடைய நூல்கள் ஒப்பற்ற அருள் விருந்தாக அமைந்துள்ளன. ஒவ்வொரு ஆத்ம சாதகரும் அவருடைய பாடல்களில் பொதிந்துள்ள கருத்துக்களை அறியும் வண்ணம் இதுவரை சுமார் 8 தலைப்புக்கள் கொண்ட பாடல்களுக்கு ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் விரிவான விளக்கம் தந்துள்ளார்கள். ஒவ்வொன்றும் தனித்தனி நூல்களாக யாவரும் படித்துப் பயன் பெறும் வகையில் வெளிவந்துள்ளன.

அவைகளாவன :—

| | | |
|---|---|---|
| **1. பரசிவ வணக்கம்** | கிரௌன்சைஸ் பக்கம் 44 **விலை** | **ரூ. 1-00** |
| **2. பரிபூரணானந்தம்** | கிரௌன்சைஸ் பக்கம் 160 | **ரூ. 3-00** |
| **3. சின்மயானந்த குரு** | கிரௌன்சைஸ் பக்கம் 166 | **ரூ. 3-00** |
| **4. மௌனகுரு வணக்கம்** | கிரௌன்சைஸ் பக்கம் 154 | **ரூ. 3-00** |
| **5. ஆனந்தமானபரம்** | கிரௌன்சைஸ் பக்கம் 148 | **ரூ. 3-00** |
| **6. சுகவாரி** | கிரௌன்சைஸ் பக்கம் 148 | **ரூ. 3-00** |
| **7. கருணாகரக் கடவுள்** | | அச்சில் |
| **8. எங்கும் நிறைகின்ற பொருள்** | கிரௌன்சைஸ் பக்கம் 108 | **ரூ. 2-50** |

மேற்கண்ட ஏழு நூல்களையும் ஒரே சமயத்தில் தபால் மூலம் தருவித்துக் கொண்டால் தபாற் கட்டணத்திற்காக ரூ. 3-00 மட்டும் சேர்த்து அனுப்பினால் போதுமானது.

# ஸ்ரீ தாயுமான சுவாமி கோயில் திருப்பணி



ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கோயில் திருப்பணிக்கு வேண்டிய தொகை சுமார் ஆறு இலட்சம். ஜனவரி மாதம் முடிய வந்துள்ள நன்கொடைகளின் தொகை இந்த அறிக்கையின் இறுதியில் வெளியிடப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ தாயுமான சுவாமிகளின் குரு பூஜை ஜனவரி மாதம் 22, 23 தேதிகளில் இராமநாத புரத்தில் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் சமாதிக் கோயிலில் பக்தி பூர்வமாக இனிது நிறைவேறியது.

சமாதிக் கோயில் எல்லேக்குள் கோயிலின் வட பக்கம் ஆஸ்ரம கட்டிட வேலே துவக்கப் பெற்றுள்ளது. வேலேயும் விரைவில் நடந்தேறி வருகிறது.

## 1979 ஜனவரி மாத நன்கொடை விவரம்

| தேதி | விலாசம் | | | ரூபாய் |
|---|---|---|---|---|
| | டிசம்பர் மாதம் முடிய நன்கொடை | | | 1 15 265 |
| 2-1-79 | ஸ்ரீ G. ராஜேந்திரன் ஜெயலெக்ஷ்மி ஸ்டோர்ஸ், | | மதுரை | 150 |
| | ஸ்ரீமதி A.R.D. இந்திரா, | | ராஜபாளையம் | 101 |
| | ,, D. சீதாலெக்ஷ்மி என்கிற மீரா, | | ,, | 101 |
| | ,, P. அக்கம்மாள், | சுண்டக்காமுத்தூர், | கோவை | 100 |
| 4-1-79 | ஸ்ரீ P. விஜயராஜன் | | தூத்துக்குடி | 301 |
| | டாக்டர் R. வெங்கடசாமி, காந்திநகர், | | மதுரை | 200 |
| | ஸ்ரீ K. தர்மர்பிள்ளை, | | காமயகவுண்டன்பட்டி | 101 |
| | ஸ்ரீமதி M. சந்தனதேவி முகுந்தன், | க. புதுப்பட்டி, | மதுரை | 101 |
| | ஸ்ரீ S. ரெங்கநாதன், | | திருச்சிராப்பள்ளி | 101 |
| | ,, S. ராதாகிருஷ்ணன், | | ,, | 101 |
| 5-1-79 | ஸ்ரீ L.R.P. சுருளிமுத்து கவுடர், | | காமயகவுண்டன்பட்டி | 250 |
| 8-1-79 | ஸ்ரீமதி பிரியா அமரவேல், | கோரிபாளையம், | மதுரை | 101 |
| | ஸ்ரீ A. கிருஷ்ணசாமி, | பீளமேடு, | கோவை | 100 |
| 9-1-79 | ஸ்ரீ A.R. ராமசாமி பிள்ளை, சீவல்பேக்டரி, | | கும்பகோணம் | 250 |
| | ,, K. ராமராஜ், | | ,, | 101 |
| 10-1-79 | ,, S. பரமசிவம் முத்திரியர், | குழுமணி, | திருச்சி | 1 001 |
| | ஆசிரியர்கள், கணேசுவரன் நடுநிலேப்பள்ளி, | | காமயகவுண்டன்பட்டி | 101 |
| | ஸ்ரீ P. திருநாவுக்கரசு, | கொங்கல்நகரம், | கோவை | 100 |

| | | | |
|---|---|---|---|
| 11–1–79 | ஸ்ரீ K.R. நாகராஜன், கீழ்கோத்தகிரி, | நீலகிரி | 100 |
| 12–1–79 | ,, A.K.D. ரெங்கசாமிராஜா குமாரர்கள், | ராஜபாளையம் | 6 000 |
| | M/s. A.R. சுப்பிரமணியபிள்ளை, | தூத்துக்குடி | 250 |
| | ஸ்ரீ M.A.C. நடராஜநாடார், | ,, | 250 |
| 13–1–79 | ஸ்ரீ ராமலிங்கா மில்ஸ் பிரைவேட் லிமிட்., | அருப்புக்கோட்டை | 100 |
| 16–1–79 | ஸ்ரீ J. பிரிதிவிராஜ், பாரதியார் தெரு, | கரூர் | 3 000 |
| | ,, S. கிருஷ்ணசுவாமி, பினங்கு, | மலேசியா | 101 |
| 17–1–79 | ,, A.S. திருப்பதி கவுடர், சில்லமரத்துப்பட்டி, | மதுரை | 501 |
| 17–1–79 | ஓர் அன்பர், புளியங்குடி, | திருநெல்வேலி | 101 |
| | ஜனாப். A. காதர்மைதீன் ராவுத்தர், | காமயகவுண்டன்பட்டி | 101 |
| 18–1–79 | ஸ்ரீ பெ. வி. பரசுராமன், | தேனி | 506 |
| | ஸ்ரீ V. P. S. A. நாராயண நாடார் & கோ, | தேனி | 316 |
| | ஸ்ரீ M. S. V. சாமிக்காளை நாடார், | தேனி | 316 |
| | ஸ்ரீ A. S. தனுஷ்கோடி, நவஜீவன் போட்டோ ஸ்டுடியோ | தேனி | 256 |
| | ஸ்ரீமதி R. விலாசவதியம்மாள், | தூத்துக்குடி | 250 |
| | ஸ்ரீ A. P. C. வீரபாகு, | தூத்துக்குடி | 250 |
| | ஸ்ரீமதி & ஸ்ரீ மு. செ. தவமணி செந்தியப்பன், | தூத்துக்குடி | 250 |
| | ஸ்ரீ S. M. நாராயணசாமி நாயுடு, | திருவேடகம் | 101 |
| | ஸ்ரீ C. S. ராஜாராம், | தேனி | 101 |
| | ஸ்ரீ S. K. M. அய்யநாடார் & கோ, | தேனி | 101 |
| | ஸ்ரீ S. A. சுவாமிராஜா, | தேனி | 101 |
| | ஸ்ரீ N. P. ராஜகோபால் செட்டியார், | தேனி | 101 |
| | ஸ்ரீ R. உண்ணாமலையம்மாள் தர்மநிதி, | அல்லி நகரம் | 101 |
| | ஸ்ரீ M. சுப்பிரமணியன், | உடுமலைப்பேட்டை | 100 |
| 19–1–79 | ஸ்ரீ சு. பரசுராமக்கவுண்டர், | ஆம்பூர் | 101 |
| | ராஜேஸ்வரி டெக்ஸ்டைல்ஸ், | மதுரை | 101 |
| 20-1–79 | பாய்லர் பிளாண்ட் ஹையர் செகண்டரி ஸ்கூல், | திருச்சி | 111 |
| | ஸ்ரீமதி P. R. ராஜம்மாள், ரோஸ் நர்ஸரிஸ்கூல், | மதுரை | 101 |
| 22–1–79 | ஸ்ரீ A. S. B. அப்பய்யா செட்டியார் & சன்ஸ், | சின்னாளப்பட்டி | 100 |
| 24–1–79 | ஸ்ரீ தூரி ராமகிருஷ்ண ரெட்டியார், | தொழுப்பேடு | 531 |
| | ஸ்ரீ E. S. ரெத்தினம், வைகுந்தம், | சேலம் | 500 |
| | ஸ்ரீ K. செல்லராஜபாண்டியன் & C. காளீஸ்வரி, | ராஜபாளையம் | 251 |
| | ஸ்ரீ M. K. முத்துராமலிங்கம் பிள்ளை, | மலேசியா | 160 |
| 25–1–79 | ஸ்ரீ V. V. கோபால் செட்டியார், | கும்பகோணம் | 500 |
| | ஸ்ரீ T. நாகராஜன், | கம்பம் | 101 |
| 25–1–79 | ஸ்ரீ E. P. கிருஷ்ணசாமி, கைகோளன் தோட்டம், | ஈரோடு | 100 |
| | ஸ்ரீ V. V. வெங்கட்டாதிரி செட்டியார், | கும்பகோணம் | 100 |
| 27–1–79 | ஆசிரியர் & அலுவலர்கள், நாடார் சரஸ்வதி ஹையர் செகண்டரி ஸ்கூல் | தேனி | 157 |

| | | | |
|---|---|---|---|
| | ஸ்ரீமதி ருக்மணி அம்மாள், வேம்படிதாளம், | சேலம் | *101* |
| | ஸ்ரீமதி S. பத்மாவதி சிவசாமி, | விருதுநகர் | *101* |
| *29–1–79* | M/s. A. V. M. M. & சன்ஸ், | தூத்துக்குடி | *250* |
| | M/s. A. A. அண்ணாமலை நாடார், | ,, | *250* |
| | M/s. S. L. சங்கரகுமார் நாடார் & சன்ஸ், | தூத்துக்குடி | *250* |
| | ஸ்ரீ சுப்பராஜா சுவாமி மடம், | ராஜபாளையம் | *100* |
| *30–1–79* | ஸ்ரீ மஹா நாராயண சுவாமி மடாதிபதி. | வேலூர் | *101* |
| | இறைபணி மன்றம், மேக்களூர், | வடஆற்காடு | *101* |
| | கிருஷ்ண பவர் ரோலிங் மில்ஸ், | தர்மபுரி | *101* |
| | ஸ்ரீ J. K. பட்டாபி ராம செட்டியார், | ,, | *101* |
| | ஸ்ரீ J. K. பத்மநப செட்டியார், | ,, | *101* |
| | ஸ்ரீ H. ராமசாமி செட்டியார், பாங்கர், | ,, | *101* |
| *31–1–79* | ஸ்ரீ S.K. இராமராஜன், க.க.உ.நி. பள்ளி, வேலூர், | சேலம் | *1 001* |
| | ,, S.V. அழகப்பன் குடும்பம், தென்சங்கம்பாளையம், | கோவை | *1 000* |
| | ,, M.S.N. சுந்தரம்பிள்ளை, உறையூர், | திருச்சி | *500* |
| | மாதர் மணிவாசகர் சங்கம், | விருதுநகர் | *400* |
| | காரைக்கால் அம்மையார் பெண்கள் வைதீக வித்யாலயம் | ,, | *400* |
| | ஸ்ரீராம் பாபுலர் சர்வீஸ் பிரைவேட் லிமிட், | பாளையம்கோட்டை | *201* |
| | கைவல்யமாதர் சங்கம், | விருதுநகர் | *200* |
| | E. K. புலி முத்தையா பிள்ளை, சாலை, | திருவனந்தபுரம் | *101* |
| | ஸ்ரீ S. போற்றி வேலு, ,, | ,, | *100* |
| | ஸ்ரீமதி P. S. சொர்ணம் வெங்கடேஸ்வரன், ஜெயநகர், | பெங்களூர் | *100* |
| | ,, சாந்தம்மாசூரியநாராயண செட்டி ,, | ,, | *100* |
| | ஸ்ரீ M. பழனிவேல், ராஜேந்திரா & கோ, | மேட்டுப்பாளையம் | *100* |
| | ஸ்ரீமதி. அம்ஸவேணி நவநீதம் ஜெயநகர், | பெங்களூர் | *100* |
| | ஸ்ரீ சாரதா மஹிளா சமாஜம் ,, | ,, | *100* |
| | ,, S. P. காளியப்ப நாடார், வள்ளியம்மா, | விருதுநகர் | *100* |
| | ,, V. A. R. உண்ணாமலை ரத்தினம், | ,, | *100* |
| | ,, ப. அ. வே. க. பழனி வேலாயுதம், | ,, | *100* |
| | ,, K. V. A. சந்திரசேகரன், | ,, | *100* |
| | ,, O. M. S. S. பழனிச்சாமி நாடார் & சன்ஸ் | ,, | *100* |
| | ,, A. S. A. P. ஆனந்தநடராஜ நாடார் | ,, | *100* |
| | ,, V. N. M. S. அய்யாச்சாமி நாடார் & பிரதர்ஸ் | ,, | *100* |
| | ஸ்ரீமதி S. P. G. R. ராஜம்மாள், தெற்குரத வீதி | ,, | *100* |
| | ஸ்ரீ S. P. G. சிதம்பர நாடார் & சன்ஸ், | ,, | *100* |
| | ,, S. P. G. ராமசாமி நாடார் & சன்ஸ், ,, | ,, | *100* |
| | ,, R. நெல்லையப்பன், அரசன் & கோ | கோவில்பட்டி | *100* |
| | ,, S. K. பாஸ்கரன் | ,, | *100* |
| | ,, S. R. M. கன்னியப்ப நாடார், | ,, | *100* |
| | M/s லாயல் டெக்ஸ்டைல் மில்ஸ் | ,, | *100* |

| | | | |
|---|---|---|---|
| 31–1–79 | ஸ்ரீ ஜெயராம் ஜவுளிஸ்டோர், | திருவரம்பூர் | 100 |
| | ,, P. தியாகராஜன் B Sc, | அருப்புக்கோட்டை | 100 |
| | ,, கு. ச. ஷண்முகவேல் நாடார், | ,, | 100 |
| | ,, P. S. அண்ணாமலை, | தூத்துக்குடி | 100 |
| | ,, S. நடராஜன், 460, V. E. ரோடு | ,, | 100 |
| | ,, R. சந்திரசேகர், அரசன் ஆட்டோ, | திருநெல்வேலி | 100 |
| | ,, C. S. அய்யாச்சாமி அய்யர், | திருச்சி | 100 |
| | ,, M. S. கிருஷ்ணமூர்த்தி செட்டியார், | ,, | 100 |
| | S. M. E. S. C. ஊழியர்கள், தென்னூர் | ,, | 151 |
| | ஸ்ரீமதி S. S. A. R. குப்பம்மாள், திருவரங்கம், | திண்டுக்கல் | 101 |
| | ஸ்ரீ P. லெக்ஷ்மண நாடார், விஜயராணி ஸ்டோர், | ராமனதபுரம் | 101 |
| | ஸ்ரீ K. R. கிருஷ்ண அய்யர், செவ்வாப்பேட்டை. | சேலம் | 101 |
| | ஸ்ரீ S. திருப்பதி நாடார் & சன்ஸ், | தேனி | 101 |
| | M/s தர்மா மெட்டல் ஸ்டோர்ஸ், | ,, | 101 |
| | ஸ்ரீ உ. ராம. உடையப்ப செட்டியார் | ,, | 101 |
| | ஸ்ரீ A. கந்தசாமி, வண்ணார்பேட், | திருநெல்வேலி | 101 |
| | ஸ்ரீ மு. மா. முருகன் செட்டியார், | ஆலங்குடி | 101 |
| | ஸ்ரீ இ. பா. காசித்தேவர், கோச்சடை, | மதுரை | 101 |
| | ஸ்ரீ R. சின்னசாமி ரெட்டியார், | லால்குடி | 101 |
| | ஸ்ரீ M. K. தைலாமுதலியார் & சன்ஸ் | திருச்சி | 101 |
| | ஸ்ரீ V. ராம்குமார், | ,, | 101 |
| | ஸ்ரீ N. கிருஷ்ணசாமி ரெட்டியார், | ,, | 101 |
| | ஸ்ரீ T. M. டிரான்ஸ் போர்ட்ஸ் | ,, | 101 |
| | ஸ்ரீ G. ராமனதன், தம்பி கோட்டை, | தஞ்சை | 101 |
| | ஸ்ரீ K. ரெங்கராஜன், K. R. டிரான்ஸ் போர்ட்ஸ் | திருச்சி | 1 001 |
| | ஸ்ரீ S. V. நாகராஜ நாடார் & பிரதர்ஸ், | விருதுநகர் | 100 |
| | ஸ்ரீ சானுமான & கோ, தெற்கு ரதவீதி, | ,, | 100 |
| | ஸ்ரீ ச. வெள்ளைச்சாமி நாடார், உள்கடை, | ,, | 100 |
| | ஸ்ரீ P. K. ராமசாமி நாடார் & பிரதர்ஸ், | ,, | 100 |
| | ஸ்ரீமதி திண்டுக்கல் பத்மாவதி அம்மாள், | திண்டுக்கல் | 325 |
| | ஸ்ரீமதி S. சொர்ணம் ஆச்சி, | ,, | 301 |
| | ரு. 100க்கு கீழ் வந்த நன்கொடைகள் | | 3 064 |
| | மாணவர்கள் மூலம் ரு. 100க்கு கீழ்வந்த நன்கொடைகள் | | 18 916 |
| | | ஆக மொத்தம் | 1 68 828 |



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 28 | காளயுக்தி ஹு மாசி மீ | ஆரம் 2 |
|---|---|---|


## பிரார்த்தனை

कैलासशैलविनिवास वृषाकपे हे मृत्युञ्जय त्रिनयन त्रिजगन्निवास ।
नारायणप्रिय मदापह शक्ति नाथ संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥

— शङ्कराचार्यः

கைலாஸ சைலவிநிவாஸ வ்ருஷாகபே
ஹே ம்ருத்யுஞ்ஜய த்ரிநயன த்ரிஜகந்நிவாஸ ।
நாராயணப்ரிய மதாபஹ சக்தி நாத
ஸம்ஸாரதுக்ககஹநாஜ்ஜகதீச ரக்ஷ ॥

விருஷாகபியே, கைலாஸவாசியே, மரணத்தைவென்றவரே, முக்கண்ணரே, மூவுலகிலும் வீற்றிருப்பவரே, நாராயணப் பிரியரே, செருக்கை ஒழிப்பவரே, அம்பிகாபதியே, ஜகதீசரே சம்சார துக்கத்தில் உழலுகிற எளியேனைக் காப்பாற்றி அருள்வீராக.

— சங்கராச்சாரியர்

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடிபூசி என்னுள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவ னன்றே.

— திருஞானசம்பந்தர்

# அருள் விருந்து

திமையைக் களைவது தவம்புரிவதற்கு நிகர்.

புகழில் ஆசை மேலோங்குவது தற்பெருமையாகும்.

சரணுகதி அடைந்திருக்கிறவனுக்குச் சீர்கேடு ஒரு பொழுதுமில்லை.

சமயங்கள் யாவும் மனிதன் மேலோனுவதற்கு வழி காட்டுகின்றன.

இந்திரியங்களை அடக்கி ஆளுவதற்கேற்ப மனிதன் மேலோனுகிருன்.

அருளுக்குப் பாத்திரமாயிருப்பவனை யார்தான் அழித்துவிட முடியும் !

மனதைத் தெளிவுபடுத்து; தெளிந்த மனதில் ஞானம் உதயமாகிறது.

மனம் திருந்தியமைந்தாலொழிய ஆத்ம சாதனத்தில் முன்னேற்றமில்லை.

நல்லொழுக்கம் தாய் தந்தையர் தேடித்தருவதன்று; அதைத் தானே தேட வேண்டும்.

பிறர் சேவையில் தன்பலம் குறைந்தால் பரமனிடமிருந்து புதிய பலம் வருகிறது.

நல்லார் தீர்மானத்தைத் தடுக்க முயலுவது காற்றைத் தடுக்க முயலுவதற்கு நிகர்.

சூரியனை நோக்கி நீ குப்பையை வீசலாம். அவனுடைய பிரகாசத்தை அது மறைக்காது.

கடவுள் பக்தி படைத்திருப்பவனே செய்வது இன்னதென்று ஆழ்ந்து தீர்மானிக்கிருன்.

மிகைபட்ட தீய ஒழுக்கம் மனிதனைத் தகிக்கிறது. பிறகு அவன் நல்வழிக்குத் திரும்புகிருன்.

மனிதனுடைய பேச்சிலும் மிக்கது அவனுடைய பழக்கம்; நல்ல பழக்கமே பிறர்க்கு நலனைப் புகட்டுகிறது.

நதி ஓயாது கடலை நாடி ஓடுவது போன்று இறைவா, நான் ஓயாது உன்னை நாடி வந்து கொண்டிருப்பேனுக.

வெளிச்சத்தைத் தொடர்ந்து நிழல் வருகிறது. அங்ஙனம் நலனும் கேடும் ஒன்ருேடொன்று பிணைந்திருக்கின்றன.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

தேவேந்திரநாத் தாகூரைப் பரமஹம்சதேவர் மதுரநாத்விச்வாசரோடு போய்ச் சந்தித்தார். அப்பொழுது அவர் மனதில் உதித்த கருத்துக்களை மதுரநாதரிடம் தெரிவித்தார். "வெறும் ஏட்டுக்கல்வி மிக வாய்க்கப் பெற்றிருக்கிறவர்கள் துரும்புக்குச் சமானமாகின்றனர். சாஸ்திர ஞானம் ஏராளமாக வாய்க்கப் பெற்றிருக்கின்ற பண்டிதன் ஒருவனிடம் விவேகமும், வைராக்யமும் இல்லாது போகுமானல் அத்தகைய மனிதன் ஒன்றுக்கும் உதவமாட்டான். கழுகு ஒன்று வானத்தில் உயரப்பறக்கிறது. ஆயினும் கீழே எங்கே செத்தபிணம் கிடக்கிறது என்று அது கூர்ந்து பார்க்கிறது. வெறும் ஏட்டுக் கல்வியாளனொருவன் அக்கழுகுக்குச் சமானமாகிறான். இப்பண்டிதன் இனிச் சாகும் பிணமாகிய உடலைப் பேணுதலிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கிறான். யாரை அணுகி அவரைத் தூக்கிவைத்துப் பேசினல் தனக்குப் பொருள் உதவி கிடைக்கும் என்னும் எண்ணத்தில் ஊறியவனாக அவன் இருக்கிறான்.

"தேவேந்திரநாத் தாகூர் யோகத்தையும், போகத்தையும் நன்கு இணைத்திருக்கிறார் என்பதை நான் காணலானேன். மகப்பேறு மிக வாய்க்கப்பெற்றவர் அவர். அவருடைய செல்வர் செல்வியர் எல்லாரும் இன்னும் வயதில் சிறியவர்கள். அவர்களைப் பேணுவதற்காக அவருடைய குடும்ப வைத்தியரும் அங்கே வந்திருந்தார். அவரிடம் ஞானநாட்டம் ஒரு புறமாயிருக்க மற்றொரு புறம் உலக வாழ்வில் அவர் வேண்டியவாறு ஈடுபட்டிருந்தார். 'தாம் இக்கலியுகத்திற்குரிய ஜனகமகாராஜன்' என்று நான் அவரைப் பாராட்டினேன். 'யோகத்தையும் போகத்தையும் இருகரங்களிலும் பற்றிக்கொண்டு இரண்டிலும் தாம் ஆழ்ந்து மூழ்கியிருக்கின்றீர்! உலக வாழ்வில் ஈடுபட்டிருப்பதற்கிடையில் தாம் கடவுள் சிந்தனையிலும் கருத்தைச் செலுத்துகிறீர் என்று நான் கேள்விப்பட்டேன். ஆதலால் தங்களைக் காண நான் இங்கு வந்திருக்கிறேன். மனமுவந்து கடவுளைப் பற்றி எனக்கு ஏதாவது எடுத்து உரையுங்கள்' என்று நான் அவரிடம் தெரிவித்தேன்.

"வேதங்களினின்று ஏதோ பிரமாணத்தை அவர் எடுத்தோதினர். பின்பு அவர் பகர்ந்ததாவது: 'இப்பிரபஞ்சம் அடுக்குத் தீபத்துக்கு நிகரானது. ஒவ்வொரு ஜீவனும் அதில் இடம் பெற்றிருக்கின்ற ஒரு தீபம் ஆகின்றன்.' இதே கோட்பாட்டை முன்பொருநாள் பஞ்சவடியில் நான் தியானித்துக்கொண்டிருக்கும் பொழுது ஞானக் காட்சியாகக் கண்டேன். நான் கண்ட காட்சிக்கும் அவர் மொழிந்த மொழிக்குமிடையில் ஒற்றுமை கண்டேன். இவரும் சாதனத்தில் மேல் நோக்கிச் சென்றவராகத்தான் இருப்பார் என்று யூகித்தேன். அவர் இயம்பியதை மேலும் தெளிவுபடுத்தும்படி நான் அவரை வேண்டினேன். அவர் பகர்ந்ததாவது: 'ஈசன் தம்முடைய மகிமைகளை விளக்குதற்கென்றே மக்களைச் சிருஷ்டித்திருக்கிறார். அப்படியல்லவென்றால் இந்த ஜகத்தை யார்தான் அறிந்துகொள்ளமுடியும்? அடுக்குத் தீபத்தில் தீபம் இல்லாது போய்விட்டால் எல்லாம் இருள் சூழ்ந்து போய்விடுகிறது. தீபகம்பம் இருப்பது கூடக் கட்புலனாகாது.'

"இப்படி நெடுநேரம் நாங்கள் உரையாடிக் கொண்டிருந்தோம். அதனல் தேவேந்திரநாத் தாகூர் மகிழ்ச்சிமிக அடையப் பெற்றார். 'தாங்கள் ஒருதடவை எங்களுடைய பிரம்ம சமாஜ விழாவுக்கு வரவேண்டும்' என்று அவர் வேண்டினர். அதற்கு நான் இயம்பியதாவது: 'அது ஈசன் இச்சையைப் பொறுத்தது. என்னுடைய மனநிலையோ அலாதியானது. ஈசன் எந்தவேளையில் என்னுடைய மனதை எந்த நிலையில் வைக்கிறார் என்பது எனக்குத் தெரியாது.' தேவேந்திரநாத் தாகூர் மேலும்மொழிந்ததாவது: 'இல்லை நீங்கள் வரத்தான் வேண்டும். மற்றும் ஒருவிஷயத்தை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் கொஞ்சம் நேர்த்தியாக உடையணிந்திருத்தல் வேண்டும். மேல்வஸ்திரம் ஒன்றையும் அணிந்திருத்தல் வேண்டும். அப்படியல்லாவிடில் ஆங்குக்

குழுமியிருக்கிறவர்கள் நீங்கள் அநாகரிகமாக ஆடையணிந்திருப்பதைக் குறித்துப் பொருந்தாத வார்த்தை பேசலாம். அதைக் கேட்டு நான் சஞ்சலப்படுவேன்.' அவர் பேச்சுக்கு நான் கொடுத்த மறுமொழியாவது : 'இல்லவேயில்லை. நேர்த்தியாக ஆடையணிந்து கொண்டு வருவேனென்று நான் வாக்குக் கொடுக்க மாட்டேன். உலக மேன்மகன் ஒருவன் போன்று நேர்த்தியாக உடையணிந்து கொள்ள எனக்குத்தெரியாது.' இதைக்கேட்ட தேவேந்திரநாத் தாகூரும் மதுரநாத்விசுவாசரும் கொல்லென்று சிரித்தார்கள்.

"அடுத்த நாளே தேவேந்திரநாத் தாகூரிடமிருந்து மதுரநாத்விசுவாசருக்குக் கடிதம் ஒன்று வந்தது. பிரம்மசமாஜத்து விழாவுக்கு என்னை அழைத்து வரவேண்டாம் என்னும் செய்தி அக்கடிதத்தில் அடங்கியிருந்தது. நாகரிகமாக உடையணிந்துகொள்ளத் தெரியாத நான் அந்த மேன்மக்கள் கூட்டத்தில் தென்படுவது பொருந்தாது என்றும் அக்கடிதத்தின் வாயிலாகத் தெரிவிக்கப்பட்டது. (இதைக் கேட்டு எல்லாரும் நகைத்தார்கள்.)

"மற்றொரு பெருமகனர் இருக்கிறார். சேனைத் தலைவர் உலக மக்களுள் ஒருவராக இருந்தாலும் அவர் கடவுள் பக்தி மிக வாய்க்கப் பெற்றவர். (மகிமசரணைப் பார்த்து) எப்பொழுதாவது ஒரு தடவை நீ அவரோடு பேசிப்பார். அவர் வேதங்களையும் வேதாந்தத்தையும் கற்றறிந்தவர். பாகவதத்தையும், பகவத்கீதையையும் அவர் ஆராய்ச்சி பண்ணியிருக்கிறார். அத்யாத்ம ராமாயணத்தையும் அவர் ஓர்ந்திருக்கிறார். சாஸ்திரங்களில் பல பகுதிகள் அவருக்கு மனப்பாடமாயிருக்கின்றன. அவரோடு உரையாடினால் இவை யாவையும் நீ கண்டு கொள்ளமுடியும்.' 'அம்மனிதர் ஆழ்ந்த பக்தியில் ஊறியவர். ஒரு தடவை நான் வராகநகரில் வீதியில் நடந்து போய்க் கொண்டிருந்தேன். அதேவேளையில் அவர் தம் காரியமாக அப்பக்கம் வந்திருந்தார். என்னைப் பார்த்ததும் அவர் ஓடிவந்து என் தலைக்கு மேல் குடை ஒன்றைப் பிடித்துக்கொண்டிருந்தார். எப்பொழுதெல்லாம் அவர் என்னைச் சந்திக்கிறாரோ அப்பொழுதெல்லாம் தம் வீட்டுக்கு வரும்படி என்னை அழைக்கிறார். அவர் பூண்டிருக்கிற பக்தியை முன்னிட்டே ஆங்குச் செல்ல நானும் இடையிடையே சம்மதிப்பேன்.

"நான் அங்கே போகிறபொழுதெல்லாம் பணிவும் அன்பும் நிறைந்தவராக அவர்எனக்குப்பணிவிடை பண்ணுகிறார். விசிறி வீசுதல், பாதங்களை வருடிக்கொடுத்தல் ஆகிய பணிவிடைகளைப் பணிவுடன் அவர் புரிகிறார்.எனக்கேற்ற உணவு வகைகளைச் சிரத்தையோடு ஆயத்தப்படுத்தி அவர் எனக்கு வழங்குகிறார். ஒரு தடவை அவர் வீட்டில் நான் இருந்தபொழுது அவர் வீட்டுப் புழைக்கடையில் எனக்குச் சமாதிநிலை கூடிவிட்டது. அது அசுசியான இடம் என்பதையும் அவர் பொருட்படுத்தாது ஆங்கு அவர் எனக்குப் பணிவிடைகள்புரிந்தார். பொருந்தாத இடம் என்று அவர் எந்தவிதமான அருவருப்பும் பூணவில்லை.

"அந்தச் சேனைத் தலைவருக்குக் குடும்பப் பொறுப்புக்கள் பல இருக்கின்றன. பலரை ஆதரிப்பது அவருடைய கடமையாகிறது. அவருடைய சகோதரர்கள் காசியில் வசித்து வருகிறார்கள். அன்னவர்களைப் பராமரிப்பதும் அவருடைய பொறுப்பாகிறது. அவருடைய மனைவியோ முன்பு கஞ்சம் பிடித்தவளாக இருந்தாள்.நல்லகாரியத்துக்குக்கூட ஒரு பைசா செலவிட அவள் முன்வரமாட்டாள். கைச் சுருக்கமே வடிவெடுத்தவளாக இருந்தாள். இப்பொழுதோ செலவு செய்து பழகியதின் விளைவாக வீட்டுக் காரியங்கள் பலவற்றிற்கு அவள் தாராளமாகச் செல்வம் வழங்குகிறாள். முன்பு பணத்தை மூட்டை கட்டுதலில் கண்ணும் கருத்துமாயிருந்தவள் இப்பொழுது தனக்கேற்பட்டுள்ள கடமைகளையெல்லாம் நன்கு நிறைவேற்றப் பணம் போதவில்லையே என்னும் பரந்த மனப்பான்மையில் ஊறியிருக்கிறாள். இப்படி மனம் மேலோங்குவது அரிதிலும் அரிது.

"அந்தச் சேனைத் தலைவருடைய மனைவி என்னிடம் மொழிந்ததாவது : 'இவ்வுலக வாழ்வில் இவருக்கு நாட்டம் கிடையாது. துறவறத்தில் தமக்குப் பற்று மிக இருப்பதாக அவர் ஒரு தடவை என்னிடம் எடுத்தியம்பினார்.' ஆம்! 'அவ்வம்மை சொன்னதில் பொருள் மிகஉண்டு. தமக்குத் துறவறத்தில் விருப்பம் இருப்பதாக இடையிடையே என்னிடத்திலும் அவர் இயம்புகிறார்.'

"அச்சேனைத் தலைவர் பக்தர்கள் நிறைந்த

குடும்பத்தில் பிறந்தவர். அவருடைய தந்தை யார் சேனையில் சிப்பாயாக இருந்தவர். அவர் சிவபக்தி மிக வாய்க்கப் பெற்றவர். ஒரு தடவை போர்க்களத்தில் சிவலிங்கம் ஒன்றை ஒரு கையிலும், உருவியெடுத்த வாளை மற்றொரு கையிலும் ஏந்தியவராக அவர் சிவபூஜை செய்தாராம்.'

"சேனைத் தலைவர் வாழ்க்கை முறையில் பழைய ஐதிகத்தினின்று சிறிதளவும் பிறழாதவர். பழைய வாழ்க்கை முறைகளைத் தீவிரமாகக் கடைப் பிடிக்கவேண்டும் என்பது அவருடைய துணிபு. நவீன முறையில் பிரம்ம சமாஜத்தைக் கேசவசந்திரசேனர் துவக்கி வைத்திருக்கிறார். அது சேனைத்தலைவருடைய கொள்கைக்கு ஒவ்வாதது. அத்தகைய கேசவசந்திரசேனரைக் காண நான் சென்றது சேனைத் தலைவருக்குப் பிடிக்கவில்லை. ஆதலால் ஒரு மாத காலம் இங்கே வருவதை அவர் நிறுத்தி விட்டார். என்னிடம் அவர் தெரிவித்ததாவது : 'சமுதாய அமைப்புக்களினின்று கேசவசந்திர சேனர் ஏதேதோ விதங்களில் முறை மாறிப் போகிறார். ஆங்கிலேயர்களோடு அமர்ந்து கொண்டு அவர் உணவு உண்கிறார். தம்முடைய மகளை வேறொரு ஜாதி இளைஞனுக்கு விவாகம் செய்து வைத்திருக்கிறார்.' ஆதலால் அவர் தாமே ஜாதிப்ரஷ்டர் ஆகிறார். அத்தகைய மனிதரோடு தாங்கள் தொடர்பு வைப்பது முறையன்று என்று அவர் என்னிடம் குறை கூறினார். அத்தகைய சேனைத்தலைவருக்கு நான் கொடுத்த விடையாவது : 'கேசவ சந்திர சேனர் நீங்கள் சொல்லியுள்ள போக்கிலெல்லாம் போயிருக்கலாம். அவைகளை யெல்லாம் பற்றி நான் ஏன் கவலைப்படவேண்டும்? கேசவ சந்திரசேனர் கடவுள் விசுவாசம் வைத்திருக்கிறார். இறைவனுடைய திருநாமத்தை அவர் பக்தி பூர்வமாக ஓதுகிறார். கடவுளைப் பற்றிய விஷயங்களைப் பேசுதற்கே நான் அவரிடம் போகிறேன். அவரிடத்துள்ள அந்த ஒரு மனப்பான்மை எனக்குப் போதுமானது. நாங்கள் இருவரும் சந்திக்கிறபொழுது பகவத் விஷயங்களைத் தவிர வேறு எதையும் உரையாடமாட்டோம். எனக்கு அது போதுமானது. பலாப் பழத்தை நான் அருந்துகிறேன். ஆனால் பலாப் பழத்தோலிலுள்ள முள்ளைப்பற்றி நான் கவலைப்படுவதில்லை. அதேவிதத்தில் கேசவசந்திர சேனருடைய உலக வியவகாரங்கள் எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். அவர் கடவுள் நாட்டம் கொண்டிருப்பது ஒன்று எனக்குப் போதுமானது.' இப்படியெல்லாம் பகர்ந்தும் சேனைத் தலைவருக்குச் சமாதானம் உண்டாகவில்லை. தம் கொள்கைகளை அவர் முரட்டுப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருந்தார். சேனைத்தலைவர்: 'கேசவசந்திரசேனரைக் காணத் தாம் ஏன் போகவேண்டும்?' விட்டுக் கொடுக்காத பாங்கில் விருவிருப்புடன் அவருக்கு நான் விடை கொடுத்ததாவது : 'ஆனால், பொருள் எதையும் நாடி நான் அவரிடம் போவதில்லை. கடவுள் விஷயம் பற்றிப் பேசுவதற்கே நான் அவரிடம் போகிறேன். அதில் தோஷம் ஒன்றும் இல்லை. ஆனால் உம்முடைய விஷயத்தை ஆராய்ந்து பாரும். ராஜப் பிரதிநிதியாகிய வைஸ்ராய் வீட்டுக்கு நீர் ஏன் போகின்றீர். அவரோ மிலேச்சன். நீவிர் அந்தணன். வைதிகராகிய தாம் ஒரு மிலேச்சனோடு தொடர்வு கொள்வது பொருந்துமா?' இத்தகைய விடை அவருடைய வேகத்தை ஒருவாறு தணித்தது.

"இதற்கெல்லாம் இடையில் சேனாதிபதியோ பக்திமிக வாய்க்கப் பெற்றவர். கடவுள் வழிபாட்டை அவர் பேருக்கத்துடன் நிறைவேற்றுகிறார். கற்பூர தீபாராதனையைப் பெரும்சிரத்தையோடு அவர் செய்கிறார். இறைவனுடைய மகிமைகளைக் குறித்துப் பாடுகிறபொழுது அவருடைய சொரூபமே அடியோடு மாறிவிடுகிறது. தம்மை மறந்து கடவுள் சிந்தனையில் அவர் ஆழ்ந்து மூழ்கியிருக்கிறார். அத்தகைய செயல்களையெல்லாம் நான் முற்றிலும் பாராட்டுகிறேன்."

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

என்னும் மறைமொழிக்கொப்பப் பரமஹம்ச தேவர் தெய்விக விஷயங்களில் மட்டும் கருத்தைச் செலுத்தி வந்தார். தம்மோடு தெய்விக விஷயங்களைப் பேசுகிறவர்களை அன்போடு அவர் பாராட்டி வந்தார். ஒவ்வொருவரும் தெய்வீகம் பொருந்தியவராகிறோம். இவ்வுண்மை ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய காட்சிக்குத் தெளிவாக விளங்கியது.

---

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

**378.** சஞ்சலமற் றெல்லாம்நீ
தானென் றுணர்ந்தேனென்
அஞ்சலியுங் கொள்ளாய்
அரசே பராபரமே.

உலக நடைமுறைகளில் எனக்கு ஒத்தவைகள் இவை, எனக்கு ஒவ்வாதவை இவை என்று மானுடனொருவன் சஞ்சலப்படுகிறான். இத்தகைய நிலைகளிலிருந்து கொண்டே அவன் பிறவிகள் பல எடுக்கிறான். ஒவ்வொரு பிறவியிலும் தனக்கு ஒவ்வாதவைகளைத் தகர்த்துப் பேசுதல் பாராட்டுதற்குரிய பெரிய செயல் என்று அம்மனிதன் கருதுகிறான். உண்மையில் அவனிடத்துப் பக்தி ஓங்குதற்கேற்ப அவனுடைய மனநிலை மாறியமைகிறது. பாமரர் பேசுகிற புன்மொழிகளிலும் அன்னவர்களுக்குத் தேவையான கோட்பாடுகள் சில புதைந்து கிடப்பதை அவன் அறிய வருகிறான். பிறரிடம் குற்றம் காண்பதே தன்னிடத்துள்ள குறைநிலைக்கு அறிகுறி என்பதை அவன் அறிகிறான். அப்பொழுது அவனுக்கு நலன் கேடுகள் அனைத்திடத்தும் உதாசினனாயிருக்கும் பரந்த மனப்பான்மை வருகிறது. ஈசனுடைய பெருந்திட்டத்தில் எல்லாவிதமான இயல்புகளுக்கும், எல்லாவிதமான பேச்சுக்களுக்கும், எல்லாவிதமான செயல்களுக்கும் இடம் உண்டு என்னும் விவேகம் வருகிறது. அந்த விவேகத்தின் விளைவாகப் பொருந்தாத பேச்சுக்களையும் அவன் பரமனோடே இணைத்துப் பொருள்படுத்துகிறான். அந்நிலையிலிருப்பவனுக்கு யாண்டும் அமைதியே நிலவுகிறது. பரமனுடைய மகிமைகளாகச் செயல்கள் யாவையும் அவன் பொருள்படுத்துகின்றான். அப்படி மனம் மாறி அமைந்தவன் எண்ணுவதும் பேசுவதும் ஒரு போக்கில் கடவுள் வழிபாடாகிறது. குழந்தை ஒன்றன் உள்ளத்தில் புற உலகிலுள்ள தீமைகள் எங்ஙனம் புலனாவதில்லையோ அங்ஙனம் பக்தனுடைய உள்ளத்தில் நலம் கேடுகளாகிய யாவும் ஈசனுடைய விபூதிகளாகவே விளங்குகின்றன. அத்தகைய மனநிலையை வளர்ப்பது நல்ல ஆத்ம சாதனம் என்பது இக்கண்ணியின் கருத்து.

**379.** பூதமுதல் நாதம்வரை
பொய்யென்ற மெய்யரெல்லாம்
காதலிந்த இன்பக்
கடலே பராபரமே.

உயிர் வகைகளனைத்தும் இன்பத்தையே நாடித்திரிகின்றன. இன்ப நாட்டத்துக்கு ஓய்வில்லை. வாழ்நாளெல்லாம் ஏதேனும் ஒரு முறையில் ஏதேனும் ஒரு துறையில் அவை யாவும் மகிழ்வையே நாடி மலைத்துப் போகின்றன. அப்படி மலைத்துப் போவதற்குக் காரணம் இன்பத்திற்குப் பிறப்பிடம் எது என்று அறிந்துகொள்ளாமல் ஏதேதோ இடங்களில் அதை நாடுவதாலேயாம். விட்டில் பூச்சி கார் இருளில் சுடர்விட்டு எரியும் தீக்கொழுந்தில் இன்பமிருக்கிறது என்று நாடிப் பறந்தோடி அதில் வீழ்ந்து மாய்கிறது. தூண்டிலில் மாட்டியிருக்கிற இரையில் இன்பமிருக்கிறது என்று எண்ணி மீன் அதை விழுங்க முயன்று உயிரை இழக்கிறது. பஞ்சபூதங்களுள் ஆகாசத்தின் தன்மாத்திரை ஓசை. ஓசையானது இன்னிசையாக வடிவெடுப்பதை நல்ல பாம்பு ரசிக்கிறது. அதன் விளைவாகப் பாம்பாட்டியின் கையில் அகப்பட்டு அது ஆனந்தத்தைஇழக்கிறது.வாயுவின் தன்மாத்திரை ஸ்பரிசம் அல்லது ஊறு. கொப்பத்தில் அகப்பட்டுக்கொண்ட காட்டு யானை அதைக் கட்ட வருகிற வீட்டு யானை கைகொடுத்து உதவும் என்ற நம்பிக்கையில் சங்கிலியில் கட்டுண்டு தன் சுதந்திரத்தையும் இன்பத்தையும்இழக்கிறது.மானுட வடிவெடுத்திருக்கும் ஜீவாத்மன் குழந்தைப் பருவத்திலிருந்து விருத்தாப்பிய தசைவரை இன்பத்தை ஏதேதோ முறைகளில் தேடித் திரிகிறான். குழந்தைப் பருவத்தில் இன்பம் பொம்மைகளிலிருக்கிறது. இளமைப்பருவத்தில் இன்பம் விளையாட்டுக்களிலிருக்கிறது. யௌவனத்தில் இன்பம் போகத்திலிருக்கிறது. காளைப்பருவத்தில் இன்பம் பொருளைச் சேகரிப்பதிலிருக்கிறது. முதுமையில் இன்பம் உறவுகொண்டாடுதலிலிருக்கிறது. ஆனால் இந்த இன்பங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக மறைந்துபட்டுப்போகின்றன. கடைசியாகப் பேச்சின் மூலமாகத் தத்துவ

விசாரத்தில் விவேகி இன்பம் காணுகின்றான். தத்துவ விசாரமும் முதுமையில் நோய் வந்து தாக்குமிடத்துப் பயன்படாது போகிறது. பஞ்ச பூதங்களைச் சார்ந்துள்ள இன்பம் பூதங்களின் விகாரம் வரும்பொழுது அழிந்துபட்டுப் போகிறது. இறைவனுடைய நாமத்தையே கேட்டு ஆனந்தம் அடைந்துவந்த ஜீவன் அதைக் கேட்க முடியாத காலம் வருகிறபொழுது இன்பத்தை இழக்கின்றான். மெய் நாட்டமுடையோர் பிரபஞ்சத்தில் எதனிடத்திருந்தும் இன்பத்தை நாடவில்லை. இவை யாவையும் ஒதுக்கித் தள்ளுமிடத்து இன்பம் தங்களுடைய நிஜசொரூபத்திலேயே இருக்கிறது என அனுபூதியில் அறியலாயினர். வாழ்க்கையில் இது அரியதொரு விசித்திரம். எத்தனை எத்தனை பிறவிகளில் எத்தனை எத்தனை விதங்களில் முயன்று தேடிய இன்பம் தன்னிடத்திலேயே இருக்கிறது என்னும் அனுபூதி முற்றுப்பெறுகிறது. தன்னிடத்தே அமைந்துள்ள இன்பமோ கடலுக்கு ஒப்ப அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. இதை அனுபூதியில் காணுவது வாழ்க்கையின் குறிக்கோள் என்பது இக்கண்ணியின் கருத்து.

**380.** வாக்குமனம் ஒன்றுபட்ட
வார்த்தையல்லால் வெவ்வேறாய்ப்
போக்குடைய வார்த்தை
பொருந்தேன் பராபரமே.

பலகோடி பிறவிகளில் போகத்தில் உழலுகிற ஜீவாத்மன் யோகத்தை நாடியாகவேண்டும். யோகநாட்டத்துக்கு முதல் படியாயிருப்பது சொல்லையும் செயலையும் ஒன்றுபடுத்துதலாம். பொதுவாக மனிதன் எண்ணியதை எண்ணியாங்கு பேசுவதில்லை. எண்ணியது ஒன்றிருக்கப் பேச்சு மற்றொன்றாகத் திரிவுபடுகிறது. பிறகு செயலுக்கு வருகின்றபொழுது மேலும் மாறுபாடடைகிறது. உள்ளத்தில் இருப்பதுதான் உரையாக வடிவெடுக்க வேண்டும். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும் என வள்ளலார் உரைத்துள்ளார்.

யோக சாஸ்திரமாக அமைந்திருப்பது பகவத் கீதை. யோகத்தைப் புகட்ட வந்த கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனைப் பார்த்து நீ பண்டிதன் போன்று பேசுகின்றாய். பாமரன் போன்று விசனப்படுகின்றாய். பண்டிதனோ உயிரோடிருப்பவரைக் குறித்தோ உயிரை இழந்தவரைக் குறித்தோ விசனப்படுவதில்லை. ஆதலால் உன் சொல்லுக்கும் சிந்தைக்குமிடையில் பொருத்தமில்லை. சொல்லையும் சிந்தையையும் பொருந்தும்படி செய்வதே யோகத்துக்கு முதல்படி. சிந்தையையும் சொல்லையும் பொருந்தப் பண்ணிய பிறகு செயலையும் அதனோடு பொருத்துதல் வேண்டும். இங்ஙனம் திரிகரணங்களை ஒன்றுபடுத்துபவனே யோகசாதனத்துக்குத் தகுதி உடையவனாகிறான். ஆதலால் சொல்லையும் சிந்தையையும் ஒன்றுபடுத்துவேனாக என்பது இக்கண்ணியின் உட்கருத்து.

**381.** வன்மையின்றி எல்லாம் மதித்து
உணர்வாய்க்கு ஆகெடுவேன்
தன்மையொன்றும் தோயாத்
நடையோ பராபரமே.

இறைவா, நீ கருணாகரன். தாயுள்ளம் படைத்தவன். உயிர்களிடத்து இரக்கம் பூண்டிருப்பவன். உயிர்களனைத்தையும் உனக்கு உரியவர்களாகக் கருதுவதால் வன்மை அல்லது கொடூரத் தன்மை உன்னிடத்துச் சிறிதேனுமில்லை. அறிந்தோ அறியாமலோ மக்கள் புரிகிற குற்றங்களை நீ குற்றங்களாகக் கருதுவதில்லை. குற்றத்தைக் குணமாகக் கருதும் பாங்குடையவன் நீ. உன்னுடைய இந்தப் பரந்த பாங்கை நான் அறியாமல் இருப்பது என் மடமை. உன்னை அடைதற்கு உன்னை நோக்கி ஓர் அடி உள் நோக்கி வருபவர்களை ஆட்கொள்ளப் பத்து அடி முந்துபவனாக நீ உள்ளாய். இதை அறிந்துகொள்ளாத பேதைமையினால் உன் அருளுக்கு நெடுநாளைக்கு முன்பே சொந்தமாயிருக்க வேண்டிய நான் இதுகாறும் வேற்றாளாகவே இருந்து வருகிறேன். குளிர் காலத்தில் சூரியஉதய வேளையில் சூரிய வெளிச்சத்திலிருந்து குளிரை அகற்றுவது முறை. அதற்கு மாறாக மானுடனொருவன் தணுப்பு நிறைந்துள்ள நிழலில் இருந்துகொண்டு குளிரால் நடுங்குவானாகில் அது அவனுடைய குற்றம். அதற்கு நிகராக இறைவா, அறிவின்மையினால் இது நான் என் மீது வருவித்துக்கொண்டுள்ள கேடுஆகும். என் அழிவுக்கு நானே முகாமையாக இருந்து வருகிறேன். அத்தகைய என்னையும் இறைவா, ஏதேனும் ஒருவிதத்தில் ஆட்கொண்டருள்வாயாக.

# அருள் நெறி

( ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சிஷ்யரான சுவாமி அபேதானந்தரின் போதனை )

ஆத்ம சாதனையில் மனம் ஈடுபடுகின்ற அளவுதான் முன்னேற்றம் காண முடியும். நாம ஜபம், பஜனை, தியானம், கைங்கரியம் ஆகிய முறைகளின்மூலம் மனதைச் சதா தெய்வச் சிந்தனையிலேயே செலுத்தவேண்டும். ஹரி ஹரி என்று உரக்கச் சொல்லிக்கொண்டு, கையைக் கொட்டிக்கொண்டு சங்கீர்த்தனமும் செய்யலாம். இடைவிடாது மனம் பக்குவம் ஆகும் வரையில் நீண்டகாலத்துக்குச் சாதனை செய்து கொண்டே வரவேண்டும். இங்ஙனம் முறையாகச் சாதனை செய்தால் மனதுக்குத் தெளிவும், சாந்தியும், வலிவும் ஏற்படும்.

உலகில் நீ பெறுகின்ற சுகம் தாற்காலிகமானது. உலக சுகம் துன்பமாக மாறக்கூடியது. கணநேர சுகத்துக்கு நீ எவ்வளவு பாடு படவேண்டியுள்ளது! கடவுள் கற்பதருவாக இருக்கின்றார். நீ மனப்பூர்வமாக விரும்புவதை அவர் நிறைவேற்றி வைக்கின்றார். கடவுள் வேண்டுமென்று நீ உள்ளூர விரும்புவாயாகில் உன் மனதை உலகை நாடிப் போவதிலிருந்து தடுத்து அருளை நாடிப்போகும் நிலைக்கு உயர்த்துவார். உலகப்பற்று குறைந்தாலொழியத் தெய்வப்பற்று உண்டாகாது. உன் உள்ளம் உலகப் பொருள்களை ஆழ்ந்து பற்றிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. உன் உள்ளத்துக்கு உலகப்பொருள்களிலுள்ள மோகம் அகலாத முன்பு கடவுளை மனப்பூர்வமாக நீ விரும்பமுடியாது. இரண்டினிடத்து ஏககாலத்தில் நீ பற்றுதல் வைக்கமுடியாது. உலகத்தினிடத்தும், தெய்வத்தினிடத்தும் நீ பற்றுதல் வைக்கமுடியாது. உலகப்பற்றை விடுவதற்குத் தெய்வப்பற்றை வளர்க்கவேண்டும். தெய்வப் பற்று வளர வேண்டுமென்று நீ ஆசைப்படு.

பொருள் தேடுவதிலும், சந்தானவிருத்தி செய்வதிலும் உலகத்தவர் வாழ்நாளைச் செலவழித்து வருகிறார்கள். வாழ்க்கையில் மணம் முடித்துக் கொண்டு கஷ்டங்களையும், துன்பங்களையும் வலிய வரவழைத்துக்கொண்டு மக்கள் சிரமப் படுகின்றார்கள். சரியான வாழ்க்கை வாழத் தெரியாது துன்ப துயரங்களையும், நோய் நொடிகளையும் வரவழைத்துக்கொள்கின்றனர். மாயையினுடைய விளையாட்டு அத்தகையதாக இருக்கின்றது. உலகப் பொருள்கள் யாவும் நிலையற்றவை யென்றும், மாயமாய் மறையக்கூடியவையென்றும் மக்களுக்கு விளங்குவதில்லை. கடவுள் ஒருவரே நித்தியப் பொருள். அவரை உறுதியாகப் பிடித்துக்கொண்டால் உனக்கு அமைதியும், ஆனந்தமும் கிடைக்கின்றன.

தெய்வத்துக்குத் தொண்டு புரிகின்றவளவு உன் உள்ளம் தூய்மையுடையதாகிறது. பற்றற்று நீ பணிவிடை செய்து கொண்டே இருக்கவேண்டும். கிருதயுகத்தில் செய்த கடும் தவம் இக்கலியுகத்துக்குத் தேவை இல்லை. கலியுகத்தில் பற்றற்றுக் கருமம் செய்தாலே போதுமானது. இக்கலியுகத்தில் மனிதனுடைய உயிர் அன்னத்தில் இருக்கிறது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுவது வழக்கம். உடல் பற்று மக்களுக்கு இப்பொழுது அதிகம். உடல் பற்று உடையவர்கள் ஞானயோகத்தைக் கடைப்பிடிப்பது கஷ்டம். காமக் குரோதாதிகளை வெல்லுவதும் அவர்களுக்குக் கஷ்டம். பேராசை, பொறாமை போன்ற ஆத்மசாதனத்துக்கு இடையூறாக இருக்கும் இயல்புகளை வெல்லுவது தவம் ஆகிறது. ராஜயோகி புலனடக்கம் பழகுவதன் வாயிலாக அவ்வியல்புகளை வென்று பழகவேண்டும். ஆனால் பக்தர்கள் அவ்வியல்புகளை எல்லாம் கடவுள்பால் திருப்பித் தங்களைக் கடவுளிடம் ஒப்படைத்து விடுகிறார்கள். "அனைத்தையும் என்பால் ஒப்படைத்து விட்டு என்னிடம் சரண்புகுந்து விடு. உன்னுடைய எல்லாப் பாபங்களையும் நான் போக்கி விடுகின்றேன். நீ கவலைப்பட வேண்டியதில்லை." இங்ஙனம் கிருஷ்ண பரமாத்மா அர்ச்சுனனுக்குக் கீதையில் பகர்ந்திருக்கிறார். கிருஷ்ணன் வாக்குப்படி நீ அனைத்தையும் ஈசனிடம் ஒப்படைத்து விடு. கலியுகத்தில் இதற்கு நிகரான தவம் இல்லை. தாய்ப்பூனை தன் குட்டியை எங்கு வைக்கின்றதோ அங்குப் பூனைக்குட்டி திருப்தியாக இருக்கிறது. பூனைக் குட்டிக்கு ஏதாவது தேவைப்படின் 'மியா மியா' என்று கத்துகிறது. உடனே தாய்ப்பூனை அதன் தேவையைக் கவனிக்கிறது. பூனைக்

குட்டி போன்று நீ உன்னை முழுவதும் தெய்வத்திடம் ஒப்படைத்துவிடு. உனக்கு எது தேவை என்பது தெய்வத்துக்குத் தெரியும். மாணிக்கவாசகர் 'வேண்டத்தக்கது அறிவோய் நீ' என்று இறைவனிடம் தம்மை ஒப்படைத்து விடுகிறார். நீயும் அங்ஙனம் உன்னை ஒப்படைத்துவிட வேண்டும். உன் மனம் மற்றவிஷயங்களில் செல்லாது முற்றும் தெய்வத்தையே சார்ந்திருக்கவேண்டும். ஒருமையுடன் தெய்வத்தின் திருமலரடியை நினைக்கின்ற தூய பயிற்சியை மனதுக்குக் கொடுக்க வேண்டும். தெய்வத்தின் குழந்தையாக இருக்கத் தெரிந்துகொள். உன்னைத் தெய்வத்தின் குழந்தை என்று நீ உணர்வாயாகில் உன் தந்தையாகிய தெய்வத்தை உணர்ந்து கொள்வது சுலபம். தந்தையாகிய இறைவனை அறிந்துகொள்கின்றவளவு உன்னை அவரிடத்திலும் அவரை உன்னிடத்திலும் நீ காண்பாய். முடிந்த நிலையில் அவரும் நீயும் ஒன்றாகிவிடுவீர்கள்.

நீ எப்பணியைச் செய்கின்றாயோ அப்பணியைத் தெய்வத்தின் பணியாக எண்ணிக்கொள். அப்படி நினைத்துக் கொள்வாயானால் கர்மபலனில் உனக்குப் பற்றுவராது. இத்தகைய தெய்விகத் தொண்டு செய்வதன் மூலம் உன் மனம் தூய்மை அடைகிறது. இங்ஙனம் மனதைத் தூய்மைப்படுத்தி மனதிலுள்ள அகங்காரத்தை அழித்துவிடு. அகங்காரத்தை அழிப்பதுதான் தவமாகிறது. அகங்காரம் அழியுமளவு உன்னை முழுவதும் நீ கடவுளிடத்து ஒப்படைத்து விடமுடியும்.

வாழ்க்கையில் நீ துன்பப்படவேண்டி நேரிடும். துன்பத்தை ஈசனுடைய அருள் என்று ஏற்றுக்கொள்வது தவமாகிறது. பற்றற்றுக் கர்மம் புரிவது மூலம் நீ சிறந்த யோகியாகின்றாய். கர்மத்தை யோகமாகப் பண்ணுகிற பொழுது ஜபதபத்துக்கு அது நிகர் ஆகிறது. மனம் எங்கேயோ சென்று கொண்டிருக்க வாய் மட்டும் இறைவன் நாமத்தைச் சொல்லும் ஜபத்தைக் காட்டிலும் ஈசுவரார்ப்பணமாகக் கர்மம் புரிவது மேலானது. மனதை அலக்கழித்து வரும் எண்ணங்களை வளர்க்க வேண்டாம். வீணான எண்ணங்கள் மனதில் வராமல் பார்த்துக்கொள். தெய்வாதீனமாக உனக்கு வந்து அமைவதைப் பெற்றுத் திருப்தி அடை. தெய்வப் பணிக்கு உன்னை அர்ப்பணம் பண்ணுவதன் மூலம் நீ அவருடைய அருளைப் பெறுகின்றாய். அருள்தொண்டு புரிய நீ கடமைப்பட்டிருக்கிறாய். அதன் பயன் இறைவனுக்குரியது. உன்னை எவ்வளவுக்கெவ்வளவு மறந்து தெய்வத்தின் நினைவை எவ்வளவுக்கெவ்வளவு வளர்க்கின்றாயோ அவ்வளவுக்கவ்வளவு நீ பண்பாளனாகின்றாய்.

மனத்தின் கூறை அறிந்து அதற்கேற்ற சாதனையை நீ மேற்கொள்ள வேண்டும். நாள் முழுவதும் தியானம் செய்ய உன்னால் முடியாது. தியானத்தில் மனம் செல்லாதபொழுது ஜபம் செய்யலாம். இறைவனுடைய நாமத்தை உரக்கச் சொல்லுவதும் சிற்சில சமயம் உன் மனதுக்குச் சாந்தியைத் தரும். பக்தர்களோடு கூடி பஜனை பண்ணுவது ஆத்ம சாதனத்தில் ஒன்றாகும். எடுத்துக்கொண்ட காரியத்தில் முழு மனதையும் செலுத்த வேண்டும். அச்செயல் பொதுநலனை அடிப்படையாகக் கொண்டதாகவோ, தெய்வ காரியமாகவோ இருக்கவேண்டும். மனதுக்குத் தியானம் செய்வதில் ஆர்வம் இருக்கும்பொழுது தியானம் செய்யலாம். ஜபம் செய்வதில் ஆர்வம் இருக்கும்பொழுது ஜபம் செய்யலாம். பொதுநலச் சேவையில் ஆர்வம் இருக்கும்பொழுது பொதுநலச் சேவை செய்யலாம். பரதத்துவங்களையும், பரமனுடைய பெருமைகளையும் ஆழ்ந்து வாசிப்பதில் மனதுக்கு ஆர்வம் இருக்கும் பொழுது நூலாராய்ச்சி பண்ணுவதைச் சாதனையாகச் செய்யலாம். இறைவனுடைய பெருமைகளை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லும் பொழுது போதிக்கிறேன் என்ற உணர்வில்லாது பகவத் கைங்கர்யம் செய்கிறேன் என்ற உணர்வோடு சொல்லவேண்டும். அப்பொழுது அதுவும் சாதனையாகிறது. மேற்கூறிய முறைகளை மாற்றி மாற்றி அமைக்கும் பொழுதுதான் மனம் சோர்வில்லாது சாதனையில் சென்றுகொண்டிருக்கும். ஆரம்ப சாதகர்கள் மனதைப் பண்படுத்துவதில் இத்தகைய முறைகளைக் கையாளவேண்டும். இல்லாவிட்டால் சாதனையில் மனதுக்குச் சோர்வு வந்துவிடும். முறையாகச் சாதனை செய்யும்பொழுது மனம் பண்படுகிறது. மனம் பண்பட்டான பிறகு தியானத்தில் மூழ்கி இருப்பதில் அது பேர்ஆர்வம் கொள்கிறது.

# அருள் தாகம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் திருப்பராய்த்துறை தபோவனம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[ 16 ஆம் பக்கத் தொடர்ச்சி ]

பிரபஞ்ச சம்பந்தமான சுகதுக்கங்கள் ஏராளமாக இருக்கின்றன. பிரபஞ்ச அமைப்பே சுகதுக்கமயமானது. பிரபஞ்ச சம்பந்தமான பெரிய துக்கம் வந்து வாய்க்குமிடத்தும் அருள்தாகம் பிடித்தவர் அதைக்கண்டு தளர்ச்சியடைவதில்லை. தர்மராஜாவுக்கு வாழ்க்கையில் துக்ககரமான நிகழ்ச்சி ஒன்று வந்தமைகிறது. நீர் கொண்டு வரச் சென்ற தம்பிமார்கள் அனைவரும் ஒருபொய்கையின் கரையில் மடிந்து கிடக்கிறார்கள். அந்நிகழ்ச்சியை அமைதியாக ஏற்றுக்கொண்டு அவர் மேலும் செயலில் ஈடுபட்டது சாதனத்தில் மேலே வந்ததற்கு அறிகுறியாகும். பிரகலாதனுக்குக் கடும் சோதனை வருகிறது. அவனுக்கு வந்த சோதனைக்கிடையில் பரநாட்டத்தில் ஈடுபட்டிருந்தது அவனுடைய போக்கு ஆகும். அப்பர் சுவாமிகளுக்குத் துக்கத்திற்கு ஏதுவான சம்பவங்கள் வந்தமைந்தன. அந்நிலையில் அவர் இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்று பகர்ந்தார். அனுபூதிமான்களைப் பிரபஞ்ச துக்கங்கள் அல்லல்படுத்தமாட்டா. பிரபஞ்ச துக்கங்கள் வந்தமையுமிடத்து அவர்கள் சாந்த நிலையிலிருந்து அவைகளை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அவர்கள் சுக துக்கங்களுக்குக் கட்டுப்படுவதில்லை. நாம் சுஷுப்தியில் எவ்வளவு சாந்தமாக இருக்கின்றோமோ, அவ்வளவு சாந்தமாக அவர்கள் துக்கத்திலும் இருக்கிறார்கள்.

விழித்திருக்கின்ற நிலையிலும் சுஷுப்தி நிலையிலிருக்கும் சாந்தநிலையிலேயே யாண்டும் இருக்க தெரிந்துகொள்ளும் பொழுதுதான் சாதனத்தில் நாம் மேலே வந்தவர்களாகின்றோம். சுஷுப்தியில் பிரபஞ்சசம்பந்தமான நலம் கேடுகள், நன்மை தீமைகள், லாபநஷ்டங்கள் ஆகிய யாவையும் கடந்து இருக்கின்றோம். ஜாக்கிரத நிலையிலும் அவையாவற்றையும் கடந்து இருக்கின்ற நிலையை அடைவதுதான் சாதனையாகும். சாதனத்தின் வாயிலாக ஜாக்கிரதத்திலும் அவை யாவற்றையும் கடந்து நிற்கின்ற நிலைக்கு மனத்தில் உறுதியைப் பெறுகிறபொழுது யோகம் பூர்த்தியாகிறது. 'ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்து, தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்?' என்பது மேலாம் கோட்பாடு. தூக்கத்தில் நாம் நம்மை மறந்து இருக்கின்றோம். நாம் தூக்கத்தில் நம்மை மறந்து இருந்தாலும் சொரூபத்தைவிட்டுப் பிசகியவர்கள் அல்லர். தூக்கத்தில் ஆனந்தமுற்றிருப்பது எல்லா உயிர்கட்கும் பொது. ஆனால் அந்த ஆனந்தத்தை அறியாமல் தூங்குகின்றோம். விழிப்பு நிலையில் தூங்கும்பொழுது ஏற்படுகின்ற ஆனந்தத்தை அனுபவிப்போமானால் அந்நிலை தூங்காமல் தூங்குகின்ற தூக்கமாகின்றது. தூக்கத்தில் மனம் ஓய்வு பெற்றிருக்கிறது. தூக்கத்தில் நம்மை மறந்திருக்கின்றோம். தூங்காத தூக்கத்தில் மனம் ஓய்வுபெற்றிருக்கிறது. நம்மை நாம் நினைந்திருக்கின்றோம். நாம் ஆனந்த சொரூபம் என்பதையும், அறிவு சொரூபம் என்பதையும் நினைவுபடுத்திப் பழகுவதைத் தியானத்தில் செய்கின்றோம். கூத்தாடுகின்ற மனதைச் சாந்தப்படுத்தவேண்டும். மனம் செய்கின்ற செயல்களையெல்லாம் ஒதுக்கி வைத்துச் சொரூபத்தில் அதை நிலைத்திருக்கும்படி செய்கின்றோம். மனம் அடங்கிச் சொரூபத்தில் நிலைத்திருப்பதற்கேற்பச் சொரூபஞானம் உண்டாகிறது. நம்முடைய நிஜசொருபத்தை அனுபூதியில் அறிந்தானபிறகு நாம் அதை இழப்பதில்லை. சிரமப்பட்டுப் பிரபஞ்சப் பொருளை நாம் சம்பாதிக்கின்றோம். ஆனால் விரைவில் அது நம் கை நழுவிப் போய்விடுகிறது. சொரூபத்தையறிந்து அதில் நிலைத்து நிற்கும்போது யாரும் நம்மை அசைத்துவிட முடியாது. யுதிஷ்டிரரும், சுகப்பிரம்மமும் பிறவியிலிருந்தே அந்நிலையில் இருந்தார்கள்.

இந்தியாவின்மீது அலெக்சாண்டர் படையெடுப்பு நிகழ்ந்தது. இந்தியாவுக்கு வந்தபோது சிந்துநதிக்கரையில் சான்றோர் ஒருவர் இருந்தார். அலெக்சாண்டருக்குச் சான்றோர் ஒருவரைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணம் இருந்தது. அவ்வெண்ணம் அலெக்சாண்டரைச் சிந்து நதிக்கு அழைத்து வந்தது. அலெக்சாண்

டர் சிந்துநதிக்கரை வந்து அச்சான்ஞேரைச் சந்தித்தார். மேல்நாட்டு ஐதிகப்படி அலெக் சாண்டர் அச்சான்ஞேருக்குத் தங்கக் கிண்ணம் ஒன்றை அன்பளிப்பாகத் தந்தார். இந்தத் தங்கக்கிண்ணம் எதற்காக என்று சான்ஞேர் வினவினர். 'நீர் அருந்தப் பயன்படும்' என்று அரசன் கூறினன். 'நதியில் நீர் ஓடுகின்றது. அந்நீரை எடுத்துப் பருகக் கடவுள் கையைத் தந்திருக்கின்ருர். பின் எதற்காக மின்னு கின்ற இந்தத் தங்கக்கிண்ணம் எனக்கு?' என்று கூறி அந்தத் தங்கக் கிண்ணத்தை வாங்க மறுத்தார். பிரபஞ்சத்திலிருந்து சான் ஞேர்களுக்கு இன்பந்தரக் கூடிய பொருள் எதுவுமில்லை. பிரபஞ்சப் பொருள்களனைத் தையும் கடந்த நிலையில் அவர்கள் இருக் கிருர்கள். சான்ஞேர்களின் நிலையை அவர் விளக்கிக் காட்டினர். "என் நாட்டிற்குத் தாங் கள் வரவேண்டும்" என்று கேட்டுக்கொண் டார் அலெக்சாண்டர். "இருக்கும் இடமே பரமானந்தம்; மற்ருெரு நாட்டுக்கு நான் போக வேண்டியது அவசியமில்லை." "இதுவரையில் சாதாரண மனிதநிலையில் உங்களோடு நான் உரையாடினேன். இனி சக்கரவர்த்தி என்கின்ற நிலையில் நான் உங்களுக்கு ஆணையிடுகின்றேன். என் ஆணைப்படி நீங்கள் வராவிட்டால் இந்த வாளால் உங்களை வெட்டிவிடுவேன்" என்ருர் சக்கரவர்த்தி. கொல்லென்று சிரித்தார் சான் ஞேர். "மூன்றரை முழம் உயரமுடைய அற்ப மானுடா, உன் மனதுக்குஅடிமைப்பட்டு நீ திண் டாடுகின்ருய். ஆனல் நீ உலகுக்குச் சக்கரவர்த்தி என்று சொல்லுகின்ருய். இந்த ஊனுடலை உன் னல் துண்டாக்க முடியும். சொருபத்தை அழிக்க உன்னல் முடியாது" என்று பகர்ந்தார். துக்கத் துக்கேதுவான சூழ்நிலையைச் சான்ஞேர் விளை யாட்டுப் போன்று எடுத்துக் கொண்டார். வாளால் வெட்டிவிடுவேன் என்ற பேச்சு பொரு ளற்ற பேச்சு என்று உறுதியுடன் கூறியது அலெக்சாண்டரின் மன நிலையை அறவே மாற் றியது. பிரபஞ்ச சம்பந்தமான எந்தத் துக்க மும் உயர் நிலையை அடைந்துள்ள ஞானியை அசைக்க முடியாது. துக்கத்திற்கு ஏதுவான சூழ்நிலை வருகின்றபொழுது எந்த அளவுக்கு நாம் அசையாதிருக்கின்ஞேமோ, அந்த அள வுக்கு நாம் யோகத்தில் மேல்நோக்கிச் சென்ற வர்களாகின்ஞேம். பிரபஞ்சத்தில் கட்டுண்டு கிடப்பவர்கள் பிரபஞ்ச இன்ப துன்பங்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்ருர்கள். பிரபஞ்ச அதீதத்திலிருப்பவர்கள் துக்கத்திலிருந்து தங் களைப் பிரித்துக்கொள்ளுகிருர்கள். பகவான் கீதையில் துக்கத்திலிருந்து பிரிவதையே யோகம் என்று குறிப்பிடுகின்ருர்.

तं विद्यात् दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्ण चेतसा ॥

தம் வித்யாத்து: கஸம் யோகவியோகம் யோக ஸம் ஜ்ஞிதம்
ஸநிச்சயேன யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ண சேதஸா

துக்கத்தின் சேர்க்கையிலிருந்து பிரிந்துகொள் வதே யோகமென்று தெரிந்துகொள்க. தளரா நெஞ்சத்துடன் தொடர்ந்து உறுதியாக அந்த யோகத்தைப் பயிலுக. அறியாமையினல் துக் கத்தோடு நாம் இணைந்திருக்கிஞேம். பிரபஞ் சத்தோடு நம்மை இணைத்துக் கொண்டதால் துக்கத்தோடும் பிணைப்புண்டு கிடக்கின்ஞேம். அது எப்படி என்பதைச் சான்றின்மூலம் விளக் கலாம். சென்னைக்குச் செல்லும் ரயில்வண்டித் தொடரில் நாம் உட்கார்ந்திருக்கின்ஞேம். நாம் வண்டியில் உட்கார்ந்திருக்க வண்டி ஓடிக் கொண்டிருக்கிறது. வண்டியில் உட்கார்ந்து கொண்டே நாம் சென்னைக்குப் போய்க்கொண் டிருக்கிஞேம் என்று சொல்கிஞேம். சென்னைக் குப் போகவேண்டுமென்ருல் நம் உடல் நடந்து போக வேண்டும். ஆனல் வண்டியில் உடல் உட்கார்ந்துகொண்டிருக்கிறது. நம் உடலை ஓடு கின்ற வண்டியோடு இணைத்துக் கொண் டோம். அப்படி இணைத்துக்கொண்டதால் உட்கார்ந்து கொண்டிருக்கிற உடல் போவ தற்கு நிகராகிறது. பிரபஞ்சம் துக்க மயமாக இருக்கிறது. பிரபஞ்சத்தோடு இணைத்துக் கொண்டிருப்பவர்கள் துக்கத்தை ஒதுக்கி வைக்க முடியாது. துக்க மயமான உலகத் தோடு நாம் நம்மை வலிய இணைத்துக்கொண் டோம். அது நம் பரிதாபகரமான நிலையா கிறது. பிரபஞ்சத்திலிருந்து விலகியிருக்கும் பொழுது நமக்கும் துக்கத்துக்கும் வெகுதூரம்.

'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'

என்பது குறள். பிரபஞ்ச சம்பந்தமான எத

விடத்திருந்து நம்மை விலக்கி எடுத்துக் கொள்கின்றோமோ அதைக் குறித்து நாம் விசனப்படவேண்டியதில்லை. துக்கம் வரும்பொழுது ஏன் அந்தத் துக்கம் வந்தது என்று விசாரித்துப் பார்த்தால் துக்கத்துக்குக் காரணம் நமக்கே விளங்கும். பொருந்தாத இடத்தில் இணக்கம் வைத்து நாம் துக்கத்தை உண்டாக்கிக்கொண்டோம் என்பது விளங்கும். பிரபஞ்ச சம்பந்தமானவை அனைத்தும் நமக்குச் சொந்தமானவை அல்ல. புத்திபூர்வமாக இந்தவுண்மையை அறிவது புத்தியோகமாகும்.

பிரபஞ்சத்தை நன்கு பயன்படுத்தவேண்டும். ஆனால் நாம் அதில் கட்டுண்டு விடலாகாது. நாம் இப்பிரபஞ்சத்துக்குப் பயிற்சி பெறுதலை முன்னிட்டு வந்திருக்கின்றோம். அதில் நாம் கட்டுண்டு போவதற்காக வரவில்லை. பிரபஞ்சத்தில் நாம் எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பகவான்கீதையில் பகர்ந்துள்ளதாவது:

ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய:
லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ரமிவாம்பஸா

பிரம்மத்தைச் சார்ந்து பற்றுதலைத் துறந்து கர்மங்களைச் செய்கிறவன் நீரில் தாமரையிலை போன்று பாபத்தில் பந்தப்படுவதில்லை.

நீரினுள்ளே தாமரையிலை தழைத்தோங்கி வருகிறது. நீர் இல்லாவிட்டால் தாமரை வளராது. நீரில் மிதந்துகொண்டு தாமரை விருத்தியடைகிறது. நீரில் விருத்தியடைந்து வரும் தாமரை இலையில் ஒரு சொட்டு நீர் ஒட்டுவதற்கு அது இடம் தருவதில்லை. தான் வளருவதற்கு நீரைப் பயன்படுத்துகிறது. ஆனால் நீர் தன் மீது ஒட்டுவதற்கு அனுமதிப்பதில்லை. அங்ஙனம் உலகை நன்கு பயன்படுத்தி நாம் மேன்மையடையவேண்டும். ஆனால் உலகப் பற்று நம் உள்ளத்தினுள் புகுந்துவிடக்கூடாது. "படகு நீரில் மிதக்கலாம்; ஆனால் படகுக்குள் நீர் புகுந்துவிடலாகாது." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வதுண்டு. படகைத் தரையிலோ வானத்திலோ செலுத்தமுடியாது. படகைத் தண்ணீரில்தான் செலுத்தமுடியும். படகுக்குள் நீர் போய்விட்டால் அது மூழ்கிப்போய் விடும். படகு நீரில் மூழ்காது பார்த்துக்கொள்வது அவசியம். நாமும் உலகத்தில் மூழ்கிப் போகாது பார்த்துக்கொள்வது அவசியம். உலகத்தில் வாழ்ந்திரு; உலகை வேண்டியவாறு பயன்படுத்து. ஆனால் உலகப்பற்று உன் உள்ளத்தினுள் புகாதவாறு பார்த்துக்கொள். உலகத்தில் பற்றுவைக்கின்ற அளவு துக்கத்தோடு உன்னை இணைத்துக்கொள்பவனாகின்றாய்.

நீண்டநாட்கள் மகப்பேறு வாய்க்காத பெற்றோர்களுக்கு ஒரு மகப்பேறு வந்து வாய்க்கின்றது. கணவனும் மனைவியும் அப்பிள்ளையைப் பிரியமாக வளர்த்து வருகின்றார்கள். அவன் வளர்ந்து பெரியவனாகும்பொழுது துஷ்டனாகப் போய்விட்டால் அல்லது பெற்றோர்களுக்கு விரோதியாகக் கிளம்பிவிட்டால் பெற்றோர்கள் துக்கத்துக்கு ஆளாகின்றார்கள். பெற்றோர்கள் பிள்ளைமீது வைத்திருந்த பற்றுதலின் விளைவாகத் துக்கத்தை வரவழைத்துக்கொள்கிறார்கள். மகன்மீது சரியான இணக்கம் வைத்துக் குழந்தையைச் சரியான முறையில் வளர்க்கும்போது அது புத்தியோகம் ஆகிறது. மகன் மீது முறைதவறி இணக்கம் வைத்தால் அது பந்தபாசம் ஆகிறது. மகன்மீது வைக்கின்ற முறையான இணக்கம் புத்தியோகம் ஆகின்றது. குடும்பிகள் எப்படி வாழ்ந்திருக்கவேண்டுமென்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்திருக்கின்றார். பணக்காரன் வீட்டில் இருக்கின்ற வேலைக்காரி போன்று உலகில் குடும்பிகள் வாழ்ந்திருக்கவேண்டும். பணக்காரன் வீட்டில் வேலை செய்யும் வேலைக்காரி பணக்காரன் வீட்டைத் தன் வீடு என்று உரிமை பாராட்டுகின்றாள். பணக்காரன் குழந்தையைத் தன் குழந்தை என்று உரிமை பாராட்டுகின்றாள். கண்ணும் கருத்துமாக வீட்டுக்காரியங்களைக் கவனிக்கின்றாள். வீண்பொழுது போக்காது வீட்டுக்காரியங்களைக் கவனிப்பதிலும், குழந்தையை வளர்ப்பதிலும் தீவிரமாக ஈடுபடுகின்றாள். அங்ஙனம் அவள் உரிமை பாராட்டுதற்கிடையில் பணக்காரனுடைய வீடும் குழந்தையும் தனக்குச் சொந்தமாகாது என்றும், தனக்குரியவை கிராமத்திலிருக்கிறதென்றும் அவள் அறிந்திருக்கின்றாள். அவ்வேலைக்காரி போன்று பிரபஞ்சப் பொருளோடு தொடர்பு வைப்பதற்கிடையில் அவை யாவும் கடவுளுக்குரியவை யென்றும், உற்றார் உறவினர்கள் யாவரும் கடவுளுக்குரிய

வர்களென்றும் கருதி வரவேண்டும். பெயரள வில் நமக்குரியவைகளாக இருக்கும் பிரபஞ்சப் பொருள்களை நாம் நன்கு பயன்படுத்தி வரவேண்டும். அப்படி அவைகளைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக அவைகளின்மீது ஆழ்ந்து பற்று வைப்போமேயானல் துக்கத்தை வலிய வரவழைத்துக்கொள்பவர்களாவோம்.

பண்பட்ட தம்பதிகளாகக் கணவனும் மனைவியும் வாழ்ந்து வந்தார்கள். நெடுநாளைக்குப் பிறகு அவர்களுக்கு அறிவுள்ள மகப்பேறு வாய்த்தது. அக்குழந்தைக்கு ஆறு வயது ஆன போது அது நோய்க்குள்ளாகியது.வெகு பிரயாசைப்பட்டு நோய்க்குச் சிகிச்சை செய்தார்கள். கணவன் வெளியே போயிருந்த சமயம் குழந்தை காலமாகிவிட்டது. தாய் இறந்து போன குழந்தையின்மீது துணியைப்போட்டு மறைத்து விட்டு வீட்டு வாயிலில் கணவனுக்காக எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள். கணவன் வந்ததும் அவனிடம் கேள்வி யொன்று கேட்டாள். "உங்களிடம் ஒருவர் ஓர் ஒப்பற்ற பொருளை ஒப்படைத்திருந்தார். அவர் நீங்கள் வீட்டில் இல்லாதபொழுது அப்பொருளை எடுத்துக்கொண்டு போய்விட்டார். நீங்கள் என்ன செய்வீர்கள்?" "பொருளுக்குரியவர் தம் பொருளை எடுத்துக் கொண்டு போனல் நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?" என்று கணவன் கூறினன். கணவனிடம் இந்த வார்த்தையை வாங்கிக்கொண்டு கணவனை வீட்டுக்குள் அழைத்துச் சென்ருள். குழந்தையினுடைய நிலைமையைக் காட்டினள். குழந்தை உயிரற்ற பிணமாகக் கிடந்தது. குழந்தை தெய்வத்துக்குரியது. கொஞ்ச நாள் தெய்வம் அக்குழந்தையை நம்மிடம் ஒப்படைத்து வைத்திருந்தார். அக்குழந்தைக்குரியவர் இப்பொழுது அதை அழைத்துக் கொண்டார். நம்மிடம் ஒப்படைத்து வைத்திருந்த வரையில் நம் கடமையைச் சரியாகச் செய்தோம். தெய்வத்தின் திருவருள் இப்பொழுது அக்குழந்தையைத் திருப்பி எடுத்துக் கொண்டது. இதுதான் சரியான மனநிலை. இந்த மனநிலைதான் தெளிந்த புத்தியோகம் ஆகிறது. இத்தகைய மனநிலையோடு உலகில் வாழ்ந்திருக்கலாம். அந்த மனநிலையைப் பெற்றுவிட்டால் உலக பந்தபாசம் நம் உள்ளத்தைப் பாதிக்காது. துயரத்துக்கும் நாம் ஆளாகமாட்டோம், அந்த மனநிலையோடு உலகத்தவர்களோடு உறவாடலாம்; உலகக் காரியங்களைச் செய்யலாம். உயிர்களெல்லாம் இறைவனுக்கு உரியவைகள். இறைவனுக்குரிய உயிர்களோடு இணக்கம் வைப்பது இறைவனேடு வைக்கின்ற இணக்கமாகிறது. இம்முறையில் இறைவனேடு இணக்கம் வைப்பது புத்தியோகமாகும். உற்ருரென்றும், வேற்ருரென்றும் கருதிப் பேத புத்தியை வளர்ப்பது துக்கத்தை வரவழைப்பதாகிறது. சரியான மனப்பான்மையும், இணக்கமும் துக்க நிவர்த்தியை உண்டு பண்ணுகின்றன. முறைதவறிய இணக்கம் துக்கத்தை உண்டுபண்ணுகிறது. அறியாமையினல் துக்கத்தோடு நம்மை இணைத்துக் கொண்டோம். விவேகத்தைப் பயன்படுத்தித் துக்கத்திலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளலாம். நல்ல விவேகம் படைத்திருப்பது புத்தியோகம் ஆகிறது. விவேகி ஒருவன் பிரபஞ்சமயமான எதைக் குறித்தும் துக்கப்படுவதில்லை. சேற்று மீன் சேற்றில் தோன்றிச் சேற்றில் வளர்ச்சியடைகிறது. ஆனல் சேறு அதனிடத்து ஒட்டுவதில்லை. சேற்றைப் பயன்படுத்திச் சேற்று மீன் வளர்வதுபோன்று உலகைப் பயன்படுத்தி உலகில் வாழ நாம் முயலவேண்டும். உலகத்தில் பற்று வைக்கின்ற அளவு துக்கத்திற்கு நாம் விதை விதைத்தவர்களாகின்ருேம். துக்கம் என்பது யாது? யோகம் என்பது யாது? என்பதை நாம் அறிந்திருக்கவேண்டும். கிருஷ்ணபரமாத்மா யோகேசுவரனுக இருந்து யோகத்திற்கு அவருடைய சொரூபத்தில் விளக்கம் தருகின்ருர்.

'தஸ்மாத் யோகி பவ அர்ஜுன' என்று கிருஷ்ணன் அர்ஜுனனை யோகியாக ஆவாய் என்கிருர். யோகத்திற்குப் பிறப்பிடமாகக் கிருஷ்ணன் இருக்கின்ருர். அவர் பிறந்தது முதல் சரீரத்தை உகுக்கும் பரியந்தம் எப்பொழுதாவது, எந்தக் காரியத்தை முன்னிட்டாவது கவலைப்பட்டதோ, கண்ணீர் சிந்தியதோ இல்லை. தசரத ராமன் நரோத்தமனுக அவதரித்த பொழுது கதறிப் பதறி அழுது இருக்கின்ருர். தசரத ராமன் ஏராளமாகக் கண்ணீர் சிந்தியதற்கு ராமாயணம் சான்ருயிருக்கின்றது. கிருஷ்ணன் மானுடனுகப் பிறந்து அரியபெரிய செயல்களைச் செய்துள்ளார். ஆனல் அவர்

வாழ்க்கையில் பிரார்த்தனை பண்ணியதாகவோ, நிஷ்டை புரிந்ததாகவோ, அழுததாகவோ இல்லை. பிள்ளைப் பருவத்தில் யோக சித்திகளை விளையாட்டாகச் செய்து முடித்தார். கோவர்த்தனகிரியைத் தூக்கியதையும், அசுரர்களை அழித்ததையும் பாலப் பருவத்திலிருந்த கிருஷ்ணன் விளையாட்டாகச் செய்துமுடித்தார். அவர் செய்த சித்திகளின் மூலமாகப் பக்தியின் பெருமையை விளக்குகிறார். பக்தியை வளர்க்கின்ற பொழுது யார் வேண்டுமென்றாலும் அரிய பெரிய செயல்களைச் செய்யலாம். அப்படிச் செய்வதற்கிடையில் அச்செயலில் கட்டுப்படாமலும் இருக்கலாம் என்பதை அவர் தம் விளையாட்டில் விளக்கியிருக்கிறார். பாண்டவர்களுக்குத் தூதுவராக அஸ்தினாபுரம் சென்றபொழுது அவர் உயிரை மாய்க்கத் துரியோதனன் திட்டமிட்டிருக்கிறானென்று எச்சரிக்கை செய்தார்கள். யாரும் தம்மைக் கொல்லவோ, சிறை பிடிக்கவோ முடியாது என்பதைத் தம் செயல் மூலம் விளக்கிக் காட்டினார்.

ராமகிருஷ்ணர் ஞானியும், பக்தனும் கட்டுப்படமாட்டார்களென்பதை நரேந்திரர், நாகமகாசயர் ஆகிய இருவர்கள் மூலம் விளக்கியிருக்கிறார். நரேந்திரரும், நாகமகாசயரும் கடவுள் சம்பந்தமான பேச்சில் ஈடுபட்டார்கள். "எல்லாம் இறைவன் செயல்" என்று நாகமகாசயர் பேச்சைத் துவக்கினார். இறைவன் என்ற சொல்லுக்குப் பதிலாக 'நான்' என்ற சொல்லை நரேந்திரன் கையாண்டார். இருவருடைய பேச்சும் முடிவில்லாது போய்க்கொண்டே இருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தலையிட்டுப் பேச்சை முடிவுக்குக் கொண்டு வந்தார். மாயை என்ற வடக்கயிறு இரண்டு பொருள்களைக் கட்ட முடியாது. மிகச்சிறியதாக இருக்கின்ற ஊசிஒன்றை வடக்கயிறு கொண்டு கட்டமுடியாது. அப்படிக்கட்டினால் அது கட்டில் அகப்படாது நழுவிப் போய்விடும். அதேபோன்று மிகப் பெரியபொருளாய் இருக்கின்ற இமாசலத்தையும் வடக்கயிறு கொண்டு கட்டமுடியாது. கட்டில் அடங்காததாக இமயமலை இருக்கிறது. அகங்காரத்தைச் சுருங்கும் நிலைக்குக் கொண்டு வந்தவர் நாகமகாசயர் ஆவார். அகங்காரத்தை அகண்டாகாரத்தில் விரிந்து போகும்படி செய்தவர் நரேந்திரர். நாம் இவ்விரண்டுக்குமிடையில் அகங்காரத்தை வைத்திருப்பதால் மாயையில் கட்டுண்டு கிடக்கின்றோம். பக்தி மார்க்கத்தில் சென்று நாகமகாசயர் போன்று அகங்காரத்தை ஒழித்துக்கட்ட வேண்டும். ஞானயோகத்தைக் கையாண்டு நரேந்திரர் போன்று அதை அகண்டாகாரமாக்கவேண்டும். கிருஷ்ணன் இவ்விரண்டு நிலைகளிலும் இருக்கக் கூடியவர். எனவே யோகேசுவரராகிய அவர் ஜீவிதம் நமக்கு முன் மாதிரியாக அமைகின்றது.

இன்னல்கள் நிறைந்த இப்பிரபஞ்சத்தில் எச்சரிக்கையுடன் நாம் வாழவேண்டும். நமக்கு அமைந்துள்ள பொறுப்புக்களை யெல்லாம் தட்டிக் கழிக்காது தீவிரமாகச் சமாளித்து வர வேண்டும். அதற்கிடையில் எதிலும் கட்டுப்படாது வாழ்கின்ற பொழுதுதான் நாம் மானுட ஜன்மத்தை நன்கு பயன்படுத்தியவர்களாகின்றோம். அப்பொழுதுதான் நாம் யோகத்தில் முன்னேறி வருகின்றோம். தளராத உள்ளம் படைத்தவர்களாக, மாறாத உள்ளம் படைத்தவர்களாக யோக சாதனத்தைத் தீவிரமாகச் செய்து வரவேண்டும். உலகத்தோடு தெய்வீக இணக்கம் வைப்பது யோகம், உலகத்தோடு வைக்கின்ற இணக்கம் அகங்காரம், மமகாரங்களை வளர்க்குமானால் அது பந்தபாசத்தை வளர்க்கும் போகமாகிறது. உலகில் யோகியும் வாழ்ந்திருக்கின்றான். போகியும் வாழ்ந்திருக்கின்றான். யோகி உலகில் வாழ்வாங்கு வாழ்ந்து வருகின்றான். போகி பந்தபாசத்தில் அகப்பட்டுக் கொண்டு துன்பத்துக்காளாகின்றான். நாம் யோகிகளாக இருந்து பந்தபாசத்தில் அகப்பட்டுக்கொள்ளாது பிரபஞ்சத்தை நன்கு பயன்படுத்தி வரவேண்டும். அப்பொழுது நாம் நம்மைப் பண்படுத்திப் பிரபஞ்ச அதீதத்திற்குப் போகின்ற பெரிய நிலையை அடைகிறோம். பிரபஞ்ச அதீதத்திற்குப் போவதற்குப் பேருதவி செய்யும் பாங்கில் இப்பிரபஞ்சம் அமைந்திருக்கிறது என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

பிரபஞ்ச வாழ்க்கை நமக்குக் கிடைத்திருக்கின்ற பெரிய பேறு ஆகும். இந்தச் சந்தர்ப்பத்தை நல்ல பயிற்சி பெறுவதற்குப் பயன்படுத்தவேண்டும். யோகியாக இருந்து தளரா நெஞ்சம் படைத்தவர்களாகப் பயிற்சியில் ஈடுபடவேண்டும். கடலில் செல்கின்ற கப்பல்

புயல்காற்றல் தாக்குண்டு தத்தளிக்கிறது என்ருலும் அக்கப்பலிலுள்ள திசைகாட்டும் காந்த முள் எப்பொழுதும் வடதிசையையே காட்டிக் கொண்டிருக்கும். அக்கப்பலைப் போன்று ஆசை என்னும் காற்றல் தாக்குண்டு நம் உடல் வாழ்க்கை அல்லல்படுவதற்கிடையில் மனம் எப்பொழுதும் தெய்வத்தை நோக்கியே சென்று கொண்டிருக்க வேண்டும். மனதைத் தெய்வத்தினிடத்தில் வைத்துவிட்டால் நாம் பந்த பாசத்துக்கு ஆளாகமாட்டோம். மனதைப் பொருந்தாத இடத்தில் வைத்தால் நாம் அழிந்துபட்டுப் போவோம்.

இவ்வுலகில் பண்படாதவர்கள் போகிகளாக வாழ்கின்ருர்கள். முறையான வாழ்க்கை வாழாது உடல் நோய், உள்ள நோய்க்கு ஆளாகின்ருர்கள். உடல் நோயைக் காட்டிலும் மன நோய் பொல்லாதது. மனதை ஆரோக்கியமாக வைத்திருந்தால்தான் வாழ்வு யோகத்துக்குத் தகுதியுடையதாகிறது. பிரபஞ்சத்தில் கட்டுப்படாத மனமே யோகத்திற்குத் தகுதிவாய்ந்த மனமாகிறது. இன்ப துன்பங்களுக்குக் கட்டுப்படாது ராக துவேஷங்களைக் கடந்து எந்த மனது இருக்கின்றதோ அந்த மனதையுடையவன் யோகியாகத் தகுதி வாய்ந்தவனுகின்ருன். மனதை எவ்வளவு பெரிய நிலைக்கு வேண்டுமானுலும் கொண்டு போகலாம். மனம் உயர்கின்ற அளவு நாமும் உயர்கின்ருேம்.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு

என்பது வள்ளுவர் வாக்கு.

தடாகத்தில் நீர்மட்டம் உயர்வதற்கேற்ப அதிலுள்ள தாமரைக் கொடிகளும் உயர்வது போன்று நம் மனம் மேல் நிலைக்குப் போகப் போக நாமும் மேலோர் ஆகின்ருேம். மனதைப் பெரியதாக்குவதற்கு உற்ற உபாயம் தளரா மனம் படைத்தவர்களாக யோகத்தில் ஈடுபடுதல் ஆகும். ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள இணக்கத்தை உறுதிப்படுத்துவது யோகம் எனப்படும். யோகம் என்ற சொல்லுக்கு இணைத்தல் என்பது பொருள். ஜீவாத்மா என்றைக்கும் பரமாத்மாவுக்கு உரியதாயிருக்கிறது. அதை மறந்து ஜீவாத்மா தன்னை ஒரு தனி வியக்தியாகக் கருதுவது அக்ஞானத்தின் விளைவாகும். விவேகத்தின் மூலம் ஜீவாத்மா தான் பரமாத்மாவுக்கு உரியது என்ற உண்மையை அறிந்து அந்த உண்மையை நிலைநாட்டுவது யோகம் ஆகும். அந்நிலையை நிலைநாட்டும் அளவுக்கு மனம் பெரிய மனதாகிறது. 'யான், எனது' என்ற மயக்கத்தை வளர்க்கின்ற அளவு நாம் கீழோர் ஆகின்ருேம். நம்மை எடுப்பது நம் மனநிலை. நம்மைக் கெடுப்பதும் நம் மனநிலையே. மனதைத் தெய்வத்துக்கு உரியதாகச் செய்து யோகத்தில் நிலைபெற்றிருக்கின்ற வாழ்வு பெருவாழ்வு ஆகின்றது. இறைவனுடைய கருவியாக நம்மை வைத்துக்கொண்டு பிரபஞ்ச கிருத்தியங்களையெல்லாம் அவருடைய ஆராதனையாகக் கருதி நிறைவேற்றி வருவோமேயானுல் நாம் யோகிகளாகின்ருேம். யோகிகளாகும் பொருட்டு அல்லும் பகலும் தீவிரமாகச் சாதனையில் ஈடுபட்டு வருவோமாக. யோகேசுவரனுகிய கிருஷ்ணன் இச்செய்தியை நமக்குத் தருகின்ருர். அச்செய்தியை ஏற்று நல்ல யோகிகளாக ஆகி வாழ்வைப் பூரணத்தில் கொண்டு முடிப்போமாக. அவருடைய அருள் சதா நம்மிடமிருந்து நமக்கு ஓயாது உதவி செய்துகொண்டிருப்பதாகுக.

அருள்தாகம் கொண்டிருந்தவர் ஸ்ரீ ராமகிருஷ்ணர். அல்லும் பகலும் தேவி காட்சி பெற வேண்டுமென்ற வேட்கை அவர் உள்ளத்தை வாட்டி வந்தது. ஆறுமாத காலம் அன்ன பானம் இல்லாது தேவி எண்ணத்திலேயே மூழ்கி இருந்தார். அவர் ஆறுமாத காலம் உறங்கவும் இல்லை. இத்தகைய மனநிலையை அருள் தாகத்தின் உச்சநிலை எனலாம். 'உனை மறந்தால் உயிர் வாழேன்' என்னும் மனநிலை அருள் தாகத்தின் முடிந்த நிலையாகிறது. அந்நிலை ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு உண்டான பொழுது "தாயே, இனியும் உன் காட்சி கிடைக்காவிட்டால் நான் உயிர்வாழ முடியாது. இதோ உன்னிடமுள்ள வாளைக்கொண்டே நான் அக்காரியத்தைச் செய்து முடிக்கிறேன்" என்று கூறித் தேவியின் சந்நிதியிலிருந்த வாளை எடுத்தார். தேவி உடனே பிரசன்னமாகி அவருக்குக் காட்சி தந்தாள். தேவியின் காட்சி பெற்ற பின்பே அவர் அருள்தாகம் தணிந்தது. அத்தகைய அருள்தாகம் உடையவர்களாக நாம் மாறி அமைவோமாக. (முற்றும்)

# சுவாமி துரியானந்தர் ஜீவிதம்

(30ஆம் பக்கத் தொடர்ச்சி)

தேச சஞ்சாரம்

ஓடுகின்ற நதியினிடத்தும் சஞ்சரிக்கின்ற சன்னியாசியிடத்தும் மாசு படிவதில்லை என்பது கோட்பாடு. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்கள் கல்வியும், பண்பும் நிறைந்தவர்களாக இருந்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் 1886-ஆம் ஆண்டு வரை திருமேனி தாங்கியிருந்து அவர்களுக்குச் சீரிய பயிற்சி கொடுத்தார். 1886-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பூதஉடலைத் துடைத்துவிட்டார். அவருடைய பூத உடல் மறைவு இளம்சிஷ்யர்களுக்குப் பேரிழப்பாக இருந்தது. அவருடைய பூத உடல் மறைந்ததும் சிஷ்யர்கள் தீவிரமாகச் சாதனையில் ஈடுபட்டனர். தக்ஷிணேசுவரத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் செய்த தபோபலன்களை யெல்லாம் உலகுக்குத் தருவதற்கு அவருடைய சிஷ்யர்கள் பெருமுயற்சி செய்தனர். வராக நகர் என்னும்இடத்தில் ஒரு மடம் ஸ்தாபித்தனர். நரேந்திரர்,பாபு ராம், சரத் போன்ற இளைஞர்கள் அங்கு தங்கித் தவ வாழ்வில் ஈடுபட்டனர். இன்னும்சில இளைஞர்கள் க்ஷேத்திர யாத்திரை புறப்பட்டனர். மற்றும் சில இளைஞர்கள் ஆழ்ந்து தவம்பண்ணுவதற்குத் தனியிடம் தேடிப் புறப்பட்டனர். ஹரிநாதர் வைராக்கிய உள்ளம்படைத்தவராக இருந்தார். எளிய உடையுடனும், உறுதியான தீர்மானத்துடனும் முற்றும் கடவுளைச் சார்ந்திருந்து வாழ்வதற்கு வீட்டை விட்டு வெளியேறினர். பல ஆண்டுகள் கால் நடையாகவே புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றார். அப்பொழுது கடுமையாகச் சாதனையும் செய்தார். சிற்சில சமயம் போர்வைகூட இல்லாதிருப்பார். வடநாட்டில் கடுமையான குளிர் இருந்தபோதிலும் பருத்தியாடையுடனேயே வாழ்ந்து வந்தார். தானாக வந்தமைந்த உணவை ஏற்றுக்கொண்டார். மத்திய மாகாணத்தில் பிரயாணம் செய்தபொழுது டேராடுனுக்கருகில் உள்ள ராஜ்பூரில் சில நாள் தங்கியிருந்தார். அங்கு விவேகானந்த சுவாமிகளைச் சந்தித்தார். விவேகானந்த சுவாமிகளுடன் ரிஷிகேஷ், மீரட் முதலிய இடங்களுக்குச் சென்று சாதனை செய்தார். 1887-ஆம் ஆண்டு தம்முடைய இருபத்து நான்காம்வயதில் சன்னியாசம் ஏற்றுத் துரியானந்தர் என்னும் சன்னியாச நாமம் பெற்றார். துரியத்தில் ஆனந்தம் அடைபவர் என்பது அதற்குப் பொருள். ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளைக் கடந்து துரியம் என்னும் நான்காவது அவஸ்தையில் அவருடைய உள்ளம் யாண்டும் இருந்து வந்தமையால் அவருக்கு அப்பெயர் பொருத்தமாக அமைந்தது எனலாம்.

வராகநகர் என்னுமிடத்தில் சுவாமி துரியானந்தரும், மற்ற சகோதர சிஷ்யர்களும் கடும் தபசில் ஈடுபட்டார்கள். உணவுக்காகச் சில வீடுகளுக்குச் சென்று பிக்ஷை எடுத்துவந்தார்கள். வெறும் அரிசி உணவு மட்டும் எடுத்துக் கொண்ட காலமே அதிகம். அவர்களிடமிருந்த உடைமைகள் மிகவும் குறைவு. தீவிர வைராக்கியம் உடையவர்களாக இருந்தமையால் உடையைப்பற்றியோ, உணவைப்பற்றியோ அவர்கள் பொருட்படுத்தவில்லை. தியானத்தில் பல மணி நேரங்கள் செலவழித்தார்கள். எஞ்சிய நேரத்தைச் சாஸ்திர ஆராய்ச்சியில் கழித்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அருளினால் உலக சுகத்தை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையும், குடும்பப் பற்றும் அவர்களுடைய உள்ளத்தில் சிறிதும் இடம் பெறவில்லை. அவர்களுடைய உள்ளத்திலுள்ள ஆசைகளெல்லாம் வெந்து போயிருந்தன. ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமிருந்து பெற்ற கருத்துக்களையெல்லாம் செயல் முறைக்குக் கொண்டுவருவதில் தீவிரமாக இருந்தனர். ஸ்ரீ ராமகிருஷ்ணரை முன்மாதிரியாகக்கொண்டு ஒப்புயர்வற்ற ஆத்மீக வாழ்வில் ஈடுபட்டனர். பரநாட்டத்தில் அவர்களுடைய உள்ளம் ஆழ்ந்து மூழ்கியது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவர்களுடைய உள்ளத்தில் ஆத்மஞானம் என்னும் விதையைப் போட்டிருந்தார். அவர்கள் கடைப்பிடித்திருந்த நெறியான வாழ்க்கை அவ்விதை நன்கு முளைத்துப் பலன் கொடுக்க உதவியாக இருந்தது. ஆனால் துரியானந்த சுவாமிகளுக்கு அந்த வாழ்க்கையும் திருப்திதரவில்லை. ஒரு சில ஆத்மீக நண்பர்களோடு மட்டும் தம்மைக் கட்டுப்படுத்தி வைத்

திருப்பது போதாதென்று எண்ணினர். உலகம் முழுதையும் தமக்குச் சொந்தமாக்கிக்கொள்ள வேண்டும் என்றும், உலகத்திலுள்ள மக்கள் அனைவரும் தமக்குரியவர்கள் ஆகிறார்களென்றும் எண்ணினர். ஆகையினால் அவர் வராக நகரைவிட்டு மறுபடியும் தனித்திருப்பதற்குப் புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்றார். முற்றும் தெய்வத்தைச் சார்ந்திருந்து வாழ்கின்ற வாழ்க்கையை மேற்கொண்டார். கால் நடையாகவே நடந்து போனார். இமயமலையிலுள்ள ரிஷிகேசத்தில் சில் நாள் தவம் பண்ணினர். அங்கிருந்து சாரதானந்தசுவாமிகளோடு கங்கோத்ரிக்குப் புறப்பட்டுப் போனார். மனித சஞ்சாரமேயில்லாத இமாலயத்தின் உட்பகுதிக்கு அவர்கள் போனார்கள். மூன்று நாட்கள் உணவில்லாது யாத்திரை செய்தார்கள். அவர்கள் சென்ற வழியில் ஏதோ சில இடங்களில் சில குடிசைகள் மட்டும் இருந்தன. அக்குடிசைகளும் பூட்டப்பட்டிருந்தன. மூன்று நாட்கள் பட்டினியாக இருந்ததால் துரியானந்த சுவாமிகள் பலவீனமடைந்தார். தெய்வாதீனமாக அவருக்கு அக்கிராம மக்கள் உணவு கொடுத்தார்கள். அதையேற்று உடல் தெம்பு அடைந்தார்.

அரசாங்கத்துக்கு விரோதமாகத் துறவு வேடம் பூண்டு ஒரு கூட்டம் சதி செய்து வருகிறதென்று அரசாங்கத்தினர் கருதினர். ஆகையால் சுவாமிகளின் மீதும் சந்தேகப்பட்டுப் போலீசார் அவரைப் பல கேள்விகள் கேட்டனர். சுவாமிகள் தமக்கே உரிய பாணியில் அஞ்சாது பதில் விடுத்தார். துறவிக்கு வேந்தனும் துரும்பு என்பதை அவர் அந்தச் சூழ்நிலையில் நிரூபித்துக் காட்டினர். அவரிடம் உள்ள நேர்மையையும், துணிவையும் பார்த்த போலீசார் அவரைவிட்டு விலகிச்சென்றனர்.

சுவாமி பிரம்மானந்தரும், சுவாமி துரியானந்தரும் சேர்ந்து சில ஆண்டுகள் யாத்திரை செய்தார்கள். முக்கியமான புண்ணிய ஸ்தலங்கட்குச் சென்று தியானம் செய்தார்கள். அவர்கள் யாத்திரையில் மக்களிடையே உள்ள தெய்வ நம்பிக்கையைக் கண்டு வியப்படையும்படியான ஒரு நிகழ்ச்சி நடந்தது. பைத்யநாத் என்பது ஒரு சிறு ஊர். அவ்வூரில் ஒரு குன்று இருந்தது. அக்குன்றின் மேல் சிவாலயம் ஒன்று இருந்தது. அவ்வூர் மக்கள் மழையை நம்பி வாழ்ந்து வந்தார்கள். சுவாமிகள் இருவரும் அவ்வூருக்குப் போயிருந்த பொழுது மழையின்மையால் நீர்ப்பஞ்சம் ஏற்பட்டிருந்தது. அவ்வூர் மக்கள் குன்றின் கீழிருந்த சிறு ஊற்றிலிருந்து குடத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு ஒருவர் பின் ஒருவராக எறும்புகள் வரிசையாக ஊர்ந்து செல்வது போன்று மலைமேலேறிக் குன்றின் மேலிருந்த சிவனாருக்கு அபிஷேகம் செய்தார்கள். தாங்கள் எடுத்துச் சென்ற நீரை அபிஷேகம் செய்தவுடன் மனம் உருகி மழை வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். காலையில் துவங்கிய நிகழ்ச்சி உருகிய பிரார்த்தனையுடன் அன்று முழுவதும் நிகழ்ந்துகொண்டிருந்தது. இக்காட்சியைக் கண்ணுற்ற சுவாமிகள் இருவரின் உள்ளங்களும் நெகிழ்ந்தன. அவ்வூர் மக்களோடு அவ்விரு சுவாமிகளும் சேர்ந்து அம்மலைவாழ் சிவனாரை மழை வேண்டுமென்று உருகிப் பிரார்த்தித்தனர். நிர்மலமாக இருந்த ஆகாயத்தில் கடுமையான மேகக் கூட்டம் சூழ்ந்து உடனே மழைபொழிய ஆரம்பித்தது. கள்ளம்கபடமற்ற விசுவாசத்தோடு கூடிய பிரார்த்தனைக்கு இறைவன் செவிசாய்க்கின்றார். இன்றும் அத்தகைய பிரார்த்தனை செய்தால் வேண்டியதை இறைவனிடமிருந்து பெறலாம்.

அங்கிருந்து சுவாமிகள் இருவரும் மற்ற க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்துகொண்டு கடைசியில் பிருந்தாவனம் போய்ச் சேர்ந்தார்கள். பிருந்தாவனத்தில் சுவாமிகள் இருவரும் ஆழ்ந்து தியானம்செய்தார்கள். துரியானந்த சுவாமிகள் பிக்ஷை எடுத்துவந்து பிரம்மானந்த சுவாமிகளுக்கும் தருவார். சிற்சில சமயம் வெறும் ரொட்டி மட்டும் அகப்படும். அவ்வமயம் ரொட்டிகளை நீரில் நனைத்துச் சாப்பிடுவார்கள். துரியானந்த சுவாமிகள் உருகிய உள்ளத்தோடு பிரம்மானந்த சுவாமிகளிடம் பகர்ந்ததாவது: "நீங்கள் குருதேவரின் அருட்செல்வராவீர். குருதேவர் உங்களுக்கு வெண்ணெயோடு கூடிய ரொட்டித் துண்டை அன்போடு படைப்பார். ஆனால் நான் இப்போது உங்களுக்கு ரொட்டித் துண்டை நீரில் நனைத்துக் கொடுக்கின்றேன்." இப்படி அவர் சொல்லும்பொழுதே பேச்சுத் தொண்டையை

அடைந்துக்கொள்ளும். இத்தகைய எளிய வாழ்வில் இருந்தபொழுது தியானத்திலும், சாஸ்திர ஆராய்ச்சியிலும் பேரானந்தம் அடைந்திருந்தார்கள். பிருந்தாவனம் கிருஷ்ணன் வாழ்க்கையோடு சம்பந்தப்பட்டதால், அங்குப் பேரன்பின் அலைகள் வீசிக்கொண்டிருப்பதை உணரலாம். பிருந்தாவனத்திலிருந்த பொழுது துரியானந்த சுவாமிகளுக்கு அனேக தெய்வீகக் காட்சிகள் ஏற்பட்டன. தாம்வேறு, தம் உடல் வேறு என்பதை ஆங்கு அனுபவத்தில் அறிந்தார்.

பிருந்தாவனத்திற்கருகிலிருந்த மதுராவுக்கும் சென்ருர். அவர் மதுராவுக்குச் சென்றிருந்த சமயம் பணக்கார வியாபாரி ஒருவன் சாதுக்களுக்கு அன்னமளிப்பதில் பெருமகிழ்ச்சியடைந்தான். அந்நகருக்கு வரும் சாதுக்களெல்லாரும் அவனுடைய வீட்டுக்குச் செல்லும்படி அறிவுறுத்தப்பட்டார்கள். சுவாமி துரியானந்தரும் அவன் வீட்டுக்குச் சென்று உணவு எடுத்துக் கொண்டார். உணவை ரசித்து உண்பதற்குப் பசி அவசியமாகிறது. பசி இருக்கும் அளவுதான் உணவைச் சுவைத்து உண்ண முடியும். அங்ஙனம் அருட்பசி உண்டாகும் பொழுதுதான் ஈசனுடைய காட்சியைப் பெறுதல் சாத்தியம். பசித்தவர்களுக்கு உணவு கொடுத்து நாம் இன்பம் அளிப்பது போன்று ஈசன் அருட்பசி உடையவர்கட்குத் தம் காட்சியைக் கொடுத்து இன்பம் அளிக்கின்ருர். அச் செல்வந்தனுக்கு இவ்வுபதேசத்தைச் செய்து சன்மார்க்க நெறியைக் காட்டித் தந்தார்.

பிரம்மானந்த சுவாமிகளுடன் துரியானந்த சுவாமிகள் அயோத்திக்கு வந்தார். அவர்கள் அயோத்திக்குப் போயிருந்த அன்று ஏகாதசி நாள் ஆகும். அன்று மக்கள் உண்ணுது விரதம் இருந்தமையால் சுவாமிகள் இருவருக்கும் அன்று உணவு எங்கும் கிடைக்கவில்லை. அன்று இரவு படுக்கப் போகும்பொழுது சுவாமி பிரம்மானந்தர், "குருதேவருடைய திட்டம் இன்றைக்கு வெறும் வயிற்ருேடு நாங்கள் தூங்கப் போகவேண்டும் என்பதாகும். அவர் விருப்பம் போல் நடக்கட்டும்." நாளைக்கு அரிசி உணவோடு ஊறுகாயும் அமையுமானல் உண்டு பசியாறலாம் என்ற எண்ணம் அவருடைய உள்ளத்தில் எழுந்தது. அக் குற்றமற்ற ஆசையை அடுத்த நாள் பக்தர் ஒருவர் மூலம் குருதேவர் நிறைவேற்றி வைத்ததை அறிந்தார். பிரம்மானந்த சுவாமிகள் அவ்விஷயத்தைத் துரியானந்த சுவாமிகளிடம் கூறி, குருதேவர் நம்முடன் யாண்டும் இருந்து நம் விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுக்கிருர் என்பதை விளக்கிச் சொன்னுர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மறைவுக்குப்பின்சுவாமி விவேகானந்தர் தலைமையில் ராமகிருஷ்ணரின் துறவறச் சீடர்கள் சங்கம் ஒன்று அமைத்தனர். முதலில் வராகநகரில் அச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. அங்கிருந்து ஆலம்பசார் என்னுமிடத்துக்கு அது மாற்றப்பட்டது. சுவாமி துரியானந்தர் தாம் தேசசஞ்சாரம் செய்வதற்கிடையில் ஆலம்பசாருக்கும் வருவார். அயோத்தி வாசத்துக்குப் பின் சுவாமி துரியானந்தர் சிலநாட்கள் ஆலம்பசாரில் வந்து தங்கியிருந்தார். அப்பொழுது சுவாமி விவேகானந்தர் மேநாடுகளில் வேதாந்த மதப் பிரசாரம் செய்துகொண்டிருந்தார். சுவாமி விவேகானந்தர் மேநாடுகளிலிருந்து தம் சகோதர சிஷ்யர்களுக்குக் கடிதம் மூலம் எழுதியிருந்தாவது : "நாம் ஆரம்பித்த ராமகிருஷ்ண சங்கத்தை வலுப்படுத்த வேண்டும். அதற்காக நீங்கள் அயராது உழைக்க வேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கொள்கைகளை மக்களுக்கிடையே தெளிவாக எடுத்து விளக்க வேண்டும். சுவாமி துரியானந்தர் சாஸ்திர ஞானம் நிரம்ப உடையவர். அவர் அனுபவ ஞானமும் உடையவர். எனவே அவர் மடத்துத் துறவிகளுக்குவேதாந்த வகுப்பு எடுக்கவேண்டும். அவர்வேதாந்தக் கருத்துக்களைப் பொதுமக்களிடையே பிரசாரம் செய்யவேண்டும்." இங்ஙனம் சுவாமி விவேகானந்தர் கடிதத்தின் மூலம் தம் சகோதர சிஷ்யர்களுக்குத் தூண்டுதல் செய்துகொண்டே இருந்தார். சுவாமி துரியானந்தருடைய மனம் உள்முக நாட்டம் கொண்டதாகவே இருந்தது. தனிமையிலிருந்து சாதனை செய்யவேண்டும் என்ற எண்ணம் அவருக்குத் தீவிரமாக இருந்தது. அமைதியான இடத்தை நாடிச் சென்று தனிமையாக இருந்து சாதனை செய்யவேண்டும் என்ற எண்ணம் அவருடைய உள்ளத்தைத் தூண்டிக்கொண்டே இருந்தது. ஆலம்பசார் மடத்தில் ஓர் ஆண்டு தங்கி இருந்தபின் மறு

படியும் வெளியில் போகவேண்டும் என்ற எண்ணம் அவருடைய உள்ளத்தில் எழுந்தது. எனவே ஆலம்பசார் மடத்தைவிட்டுச் சுவாமி துரியானந்தர் வெளியேறி மேற்கு இந்தியாவில் உள்ள பல இடங்களுக்கு யாத்திரை சென்றார். கடைசியாக கிர்னார் மலைப்பிரதேசத்திற்கு வந்துசேர்ந்தார்.

சுவாமி துரியானந்தர் கிர்னார் என்ற மலையில் தவம் செய்து கொண்டிருந்த பொழுது அச்சூழ் நிலை தியானத்துக்கு ஏற்றதாக இருந்ததை அறிந்தார். அங்கிருந்து கங்கைக்கரைக்குத் தவத்துக்குச் சென்றார். சீதோஷ்ணநிலை மாறு பாட்டினாலும், முறையாக உணவு உண்ணாத தாலும் அவருடைய உடல் நோய்வாய்ப் பட்டது. நாளுக்கு நாள் நோய் அதிகரித்துக் கொண்டேவந்தது. சிறந்த வைத்தியர் ஒருவரை அணுகிச் சிகிச்சை பெறவேண்டுமென்ற எண் ணம் துரியானந்த சுவாமிகளுக்கு வந்தபொழுது அவருக்கு ஒரு சுலோகம் ஞாபகத்துக்கு வந் தது. அந்தச் சுலோகத்தின் பொருளாவது: "நோய்வாய்ப்பட்ட சாதுக்குக் கங்கை ஜலமே சிறந்த மருந்தாகிறது. நாராயணனே சிறந்த வைத்தியராகிறார்." இவ்விஷயம் அவர் ஞாபகத்துக்கு வந்ததும் வைத்தியரிடம் போக வேண்டுமென்று எண்ணியதற்கு வெட்கப்பட் டார். அக்கருத்தில் பூரண நம்பிக்கை உடைய வராகக் கங்கை நதிப்பக்கம் சென்று கங்கை ஜலத்தை எடுத்து அருந்திவிட்டு, நாராயண மந்திரத்தை ஜபித்துக்கொண்டு தாம் தங்கி யிருந்த குகைக்கு வந்தார். கடவுளினும் சிறந்த வைத்தியர் உண்டோ! கங்காஜலத்திலும் சிறந்த மருந்துண்டோ! என்ன ஆச்சரியம்! குகைக்கு வந்த சிறிது நேரத்திற்குள் அவர் நோயிலி ருந்து முற்றும் குணமடைந்தார். லௌகீக புத்தி படைத்தவர்களுக்குப் பணத்திலும், போலியிலும் நம்பிக்கையுண்டாகிறது. ஆனால் உண்மையான சான்றோர்கள் அவற்றை நம்புவ தில்லை. அவர்கள் முற்றிலும் புனிதம் நிறைந்த இயற்கையினிடத்தும், இறைவனிடத்தும் நம் பிக்கை வைக்கின்றார்கள். 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்ற கோட்பாடு முற்றிலும் உண்மை என்பது பக்தர்களுக்கு விளங்கு கிறது.

உத்தரகாசியில் சிலநாட்கள் தவம் செய்ய வேண்டுமென்று விரும்பினார். இமாலயத்தின் உட்பகுதியில் உத்தரகாசி அமைந்துள்ளது. நகரச் சூழ்நிலையிலிருந்து அது தள்ளியிருப்ப தால் தியானம் செய்வதற்கு ஆங்கு அமைதி யான சூழ்நிலை இருக்கிறது. ஆங்குச் சுவாமிகள் கடுமையான சாதனையில் ஈடுபட்டார். அதி காலையில் எழுந்திருந்து கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டு ஆழ்ந்த தியானத்தில் மூழ்கிவிடு வார். உணவைப்பற்றிச் சிந்தனை இல்லாது சில நாட்கள் தியானத்திலேயே மூழ்கிவிடுவார். தியானம் கலைந்தபிறகு சாஸ்திர ஆராய்ச்சி செய்வார். பிறகு உணவுக்காக வெளியே சென்று வருவார். உணவுக்குப் பின்பு சிறிது ஓய்வு எடுத்துக்கொள்வார். மாலையில் மீண் டும் தியானத்தில் மூழ்கிவிடுவார். கடவுள் சிந்தனையைத் தவிர வேறு சிந்தனை உள்ளத் தில் புகாதவாறு வாழ்க்கைத் திட்டத்தை அமைத்துக் கொண்டார். உபநிஷதங்களின் பெரும்பகுதியை மனப்பாடம் செய்துவைத் திருந்தார். உபநிஷதங்களைக் குறித்துத் தியா னம் செய்யும்போது அவற்றிற்குப் புதிய விளக்கங்கள் அவர் மனதில் உதயமாகும். உபநிஷதங்கள் தத்துவங்களைப் புகட்டும் நூல் களாகமட்டும் அவருக்குத் தென்படவில்லை. உபநிஷத வார்த்தைகள் தெய்வீக சக்தி நிறைந்தவைகளாக அவருக்குத் தென்பட்டன. அவர் உபநிஷதங்களைத் தெய்வீகப்பொக்கிஷங் களாகக் கருதினார். விவேக சூடாமணி என் னும் நூல் முழுவதையும் மனப்பாடம் செய்தி ருந்தார். பாகவதம் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்த மற்றொரு நூலாகும். அவற்றிலுள்ள கருத்துக்களை அனுபவமாக்க வேண்டுமென்று அவற்றைக் குறித்துத் தியானம் செய்வார். பிறருக்குப் போதனை பண்ணவேண்டும் என்ப தற்காக அவர் அந்நூல்களைக் கற்கவில்லை. அவற் றைக் கற்று அவற்றிலுள்ள கருத்துக்களை வாழ்க்கைமயமாக்க வேண்டும் என்பதே அவ ருடைய திட்டம். தம்மிடத்திலுள்ள ஆத்ம ஞானத்தை விழிப்படையச் செய்வதற்காக அந்நூல்களை அவர் கற்பார். அவர் அறிவைப் பெறவேண்டும் என்பதற்கோ, கல்விமான் என்று தம்மைச் சொல்லிக்கொள்வதற்கோ சாஸ்திரங்களைக் கற்கவில்லை. சாஸ்திரங்களைக் கற்பதைச் சாதனையாகச் செய்தார். ஞான

விழிப்பை உண்டாக்குவதே சாஸ்திரங்களின் பயனாகும். அச்செயல் முடிந்தவுடன் சாஸ்திரங்கள் நமக்குத் தேவையில்லை என்பது துரியானந்த சுவாமிகளின் கருத்து. எனவே அவர் அன்னை பராசக்தியிடம் பிரார்த்தித்துக் கொண்டதாவது: "தாயே, என்னிடமிருந்து நூலறிவையெல்லாம் எடுத்துவிடு. தூய பக்தியை எனக்குக் கொடு."

துரியானந்த சுவாமிகள் புதிய மொழிகளையும் கற்றார். அம்மொழிகளிலுள்ள நூல்களின் கருத்துக்களை யெல்லாம் தம் அனுபவத்துக்குக் கொண்டு வந்தார். சீக்கியர்களுடைய மத நூலாகிய கிரந்தசாகிப் என்னும் நூலைக் கற்றார். பல மதங்களிலுள்ள கருத்துக்களையும் ஒப்பு நோக்கி ஆராய்ந்து தம் அருள் உணர்வை அகண்டமாக ஆக்கிக்கொண்டார். ஒரு தடவை நிர்விகல்ப சமாதியை அடைந்தவர் இப்பிரபஞ்ச வாழ்க்கைக்கு வருவது முடியுமா என்ற பிரச்சினை எழுந்தது. அதற்குச் சுவாமி துரியானந்தர் அளித்த விடையாவது: "நிர்விகல்ப சமாதியடைந்தவர் உலகுக்குத் திரும்பி வருவது சாத்தியமில்லை. நிர்விகல்ப சமாதிக்குப் பின் உலகுக்குத் திரும்பி வருவது ஒருவருடைய சக்திக்கு அப்பால் பட்டது. சமாதியே ஈசனுடைய அருளால் வந்து வாய்க்கிறது. சமாதிக்குப்பின் உலகுக்குத் திரும்பி வருவதும் அவருடைய இச்சையால் நிகழ்கிறது. யாவும் அவருடைய இச்சை."

சுவாமி துரியானந்தர் இளமையிலிருந்தே சாஸ்திரத்தில் மிகுந்த விசுவாசம் வைத்திருந்தார். சாஸ்திரங்களிலுள்ள விதி முறைகளை விடாது பின்பற்றுவார். சாஸ்திரங்களுக்கேற்ப அவர் வாழ்வை உருவாக்கினார். அவருடைய இளமை வாழ்க்கையைப் பற்றி அவரே கூறியிருப்பதாவது: "நான் சிறுவனாக இருந்த பொழுது என் மனதை மிகவும் கவர்ந்தது யோகசாஸ்திரமாகும். அடக்கம், ஏலாமை, தனிமை ஆகிய பண்புகள் என் உள்ளத்துக்கு மிகவும் பிடித்தமாயிருந்தன." துரியானந்த சுவாமிகள் பேசுவது மிகவும் குறைவு. அப்படி அவர் ஏதாவது பேசினால் அது ஆத்மீக சம்பந்தமாகத்தானிருக்கும். அவர் யாண்டும் தம்மனதை உள்முகமாகத் திருப்பிக் கடவுள் சிந்தனையில் மூழ்கியிருக்கவே செய்வார். அவர் புலனடக்கம் பழகியிருந்ததில் வீரராகத் திகழ்ந்தார். தியானத்தில் அமரும்பொழுது அவருடைய உள்ளத்தை வெளி விஷயம் எதுவும் தாக்க முடியாது. அப்படி அவர் அடக்கம் பழகியிருந்தார். தம் குரு சகோதரர் ஒருவரிடம் அவர் பகர்ந்ததாவது: "நான் தியானத்தில் அமரும் பொழுதெல்லாம் பொறிகளைப் பூட்டி வைத்து விடுகின்றேன். எனவே வெளி விஷயங்கள் எதுவும் என் உள்ளத்துக்குச் செல்ல முடியாது. தியானம் கலைந்த பிறகுதான் பொறிவாயில்களைத் திறந்து விடுகின்றேன். அப்பொழுது மனம் புற உலகுக்குச் சென்று புறப்பொருளை அறிகிறது. நான் செய்வது போன்று நீங்களும் தியானத்துக்குப் போகும் பொழுது "உள்ளே வர அனுமதியில்லை" என்று பெரிய எழுத்துக்களில் எழுதி உங்கள் மனமாகிய வாயிலில் தொங்கவிட்டு விடுங்கள். அப்பொழுது உங்களுக்கும் தியானம் கைகூடும்.

சுவாமி துரியானந்தர் பல இடங்களுக்குச் சென்று தவம் இயற்றிவந்தார். தாம் நடந்து போய்க்கொண்டிருந்தபொழுது மக்கள் அவரவர்களுக்குரிய காரியங்களில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்தார். தாம் காலத்தை விரயமாக்கிக் கொண்டிருப்பதாக அவர் உள்ளத்தில் எண்ணம் எழுந்தது. அவ்வெண்ணம் அவருக்கு அடிக்கடி வந்துகொண்டிருந்தது. அவ்வெண்ணத்தை அவரால் அகற்ற முடியவில்லை. அவ்வெண்ணம் அவருடைய உள்ளத்தை அலக்கழித்துக்கொண்டிருக்க ஒரு மரத்தடியில் அமர்ந்து நித்திரை போனார். அப்பொழுது அவருக்கு ஒரு கனவு உண்டாயிற்று. அக்கனவில் அவருடைய சரீரம் விரிவடைந்து நான்கு திசைகளிலும் பரவி வந்தது. உலக முழுவதும் அவருடைய சரீரம் விரிந்திருந்தது. "நீ எவ்வளவு விரிந்திருக்கின்றாய்! உன்னுடைய வாழ்க்கை உபயோகமற்றது என்று ஏன் நினைக்கின்றாய்? எழுந்திரு; உறுதியோடு உண்மையை அறிவதில் ஈடுபடு; உண்மையை அறிவதே வாழ்க்கையின் சிறந்த லட்சியம்" என்று தமக்கு யாரோ உபதேசிப்பதை உணர்ந்தார். கனவிலிருந்து விழித்தெழுந்தார். அவருடைய உள்ளத்திலிருந்த ஐயப்பாடுகளெல்லாம் மறைந்தன. சுவாமி துரியானந்தர் 1896 ஆம் ஆண்டில் கல்கத்தா வந்தார்.

(தொடரும்)

# அனுமன்-6

(சுவாமி ஆத்மானந்தர்)

**சீதையைத் தேடுதல்**

பொழுது சாயும் பொன்னிறமான மாலை வேளையில், இலங்கை மாநகர மதிலுக்கு இப்பாலுள்ள பவளமலையின் உச்சியில் இருந்து கொண்டு, அந்நகரின் வளப்பத்தினையும் பேரழகினையும் கண்குளிரக் கண்டு வியக்கின்றான் அனுமன். தேவேந்திரன் அமராவதி நகரும் தோற்றுப்போம்படி எல்லாவிதமான போக மோகப் பொருட்களும் ஆங்கே நிறைந்துகிடந்தன. விண்முட்டும் மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் காட்சியளித்தன. கட்டடங்கள் பலப்பல வர்ணப்பூச்சுக்கள் பூசப்பெற்று ஒளி வீசிப் பிரகாசித்தன. பலவகைப்பட்ட மாணிக்கக் கற்களையும், மரகதக் கற்களையும் அடுக்கிக் கட்டியதோ எனும்படி இருந்தது அவற்றின் கண்கவர் தோற்றம். மின்னலைக்கொண்டு இழைத்தது போன்ற அலங்கார ரேகைகளும் ஆங்காங்கே கட்டடங்களில் இழைக்கப்பெற்றிருந்தன. அவற்றுள் வெள்ளியையும் வெயிலையும் குழைத்துப் பூசியதோ எனும்படிப் பொலியும் கட்டடங்களும் இருந்தன. மேக மண்டலத்துக்கு மேலேயும் சென்று மதிமுட்டும் மாடங்களும் பல இருந்தன. என்ன பொருட்களைக்கொண்டு கட்டியிருக்கிறார்கள் என்று அறிய இயலாதபடி இன்னும் சில மாளிகைகள் வனப்பும் ஒளியும் மிக்கனவாய்க் காட்சியளித்தனவாம்.

**பொன் கொண்டு இழைத்த? மணியைக்கொடு பொதிந்த?**
**மின் கொண்டு அமைத்த? வெயிலைக் கொடு சமைத்த?**
**என் கொண்டு இயற்றிய எனத் தெரிவு இலாத—**
**வன் கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம்.**

மூன்று உலகங்களில் எந்த நகரங்களும் இந்நகருக்கு இணையாகா எனும்படி ஐசுவர்யம் அனைத்தும் ஒருங்கே நிரம்பப் பெற்றதாய்ப் பொலிவுற்று விளங்கியது இலங்கைமாநகரம். அந்நகரில் வாழ்ந்த அரக்க மகளிர்க்குத் தேவ மாதர் பணிப்பெண்களாய் அமர்ந்திருந்தனர். அரக்க வீரர்களுக்குத் தேவர்கள் பணியாட்களாய் இருந்து வந்தனர். இங்ஙனம் வானுலக வாசிகளாகிய தேவர்களையெல்லாம், பூவுலக வாசிகளாகிய அரக்கர்களுக்குப் பணியாட்களாக்கி, இலங்கையில் வீற்றிருந்து அரசு செலுத்திவந்தான் இராவணன். இலங்கைமாநகரின் எழிலையும், அதன் ஐசுவர்யத்தையும் கண்டு வியந்த அனுமன், இத்தனைக்கும் காரணமாக இருந்த இராவணன் பேராற்றலையும் பெருந் தவத்தினையும் எண்ணி எண்ணி வியக்கலானான்.

அழகும் ஐசுவர்யமும் நிறைந்த இலங்காபுரியின் மதில்சுவர் கட்டுக்காவல்மிக்கது. பேராற்றல்மிக்க அரக்கவீரர் பல்லாயிரக்கணக்கானோர் கண்ணை இமை காப்பது போன்று அதனைக் காத்துவந்தனர். அரக்க வீரர் ஆற்றலினை நன்கறிந்த அனுமன் மதிலைக் கடந்து உள்ளே செல்லுதற்குரிய உபாயத்தினை எண்ணினான். அரக்கர் இரவில் சஞ்சரிக்கும் இயல்பினர். கடல் கடக்க எடுத்த பேருருவோடு அரக்கர் அறியாவண்ணம் இலங்கையினுள் நுழைதல் என்பது இயலாத காரியமாகும். அதனால் தன் பெருவடிவைச் சுருக்கிச் சிற்றுருக் கொண்டு, மதிலைத் தாண்டிச் செல்ல எண்ணி ஒருபக்கமாக ஒதுங்கிப் போனான். அப்போது இலங்காபுரியின் காவல் தெய்வமாகிய இலங்கிணி என்பவள் அனுமனைக் கண்டுகொண்டாள். அவள் யமனைப் போல் வலிவுள்ளவள். மூன்றாம்பிறைச் சந்திரனைப் போன்ற வளைந்த கோரைப் பற்களை உடையவள். நெருப்புப் பொறி பறக்கும் சிவந்த கண்களை உடையவள். இதயத்தில் இரக்கம் என்பது சிறிதும் இல்லாதவள். தன் எட்டுக் கைகளிலும் கொடிய ஆயுதங்கள் பலவற்றைத் தாங்கிப் பிடித்திருப்பவள். இத்தகைய பயங்கர வடிவினளாகிய இலங்கிணி, அனுமனைக்கண்டதும் தன் இடி போன்ற குரலில் 'நில் நில்' என்று அதட்டித் தடுத்து நிறுத்தினாள். எதிர்பாராத முறையில் திடீரெனத் தடுத்து நிறுத்திய அவளைக்கண்டு அனுமன் சிறிதும் அஞ்சவில்லை. 'வருக' என்று அவளை வரவேற்றான். அவள் அனுமனை நோக்கி 'என்ன காரியம் செய்யத் துணிந்தாய்? அஞ்சாமல் அசட்டுத் துணிச்சலுடன் இலங்கை மதிலைக் கடக்கத் துணிந்தாய்! அறிவில்லாத

வனே! அப்பால் ஓடிப்போ' என்றாள். அதற்கு மறுமொழியாக அனுமன், 'இந்த நகரைக் காணும் ஆசையால் இதனுள் போகிறேன். அதனால் உனக்கு வந்த நஷ்டம் ஒன்றுமில்லையே?' என்றான். திரிபுரம் எரித்த சிவ பெருமானும் செல்லுதற்கு அஞ்சும் இந்நகருள் அற்ப குரங்காகிய நீ செல்ல முயல்கிறாய்! அது ஒருபோதும் இயலாது. சீ, சீ, அப்பால் ஓடிப்போ! என்று இகழ்ந்து எள்ளி நகைத்தாள். அனுமனும் பதிலுக்கு அவளைப் பார்த்து எள்ளி நகையாடினான். அவள் அனுமனை நோக்கி, 'நகைக்கின்ற நீ யார்? உன்னைக் கொன்றுவிடுவேன்; உயிரை இழந்து நீ என்ன பயனை அடையப் போகிறாய்? ஓடிப்போகாமல் இன்னும் எதிரே நிற்கின்றாயே' என்றாள். 'இந்நகரினுள் புகுந்து எல்லா இடங்களையும் பார்த்துவிட்டுத்தான் போவேன். அதற்குமுன் இவ்விடத்தை விட்டுத் திரும்பிப் போகேன்' என்றான் அனுமன். அனுமனின் மறுமொழியைக் கேட்ட இலங்கினிக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. தன் கையிலிருந்த சூலாயுதத்தை அவன்மீது வீசியெறிந்தாள். அனுமன் அதைப்பிடித்துச் சுக்கல் சுக்கலாக முறித்துவிட்டு, அவள் கையில் வைத்திருந்த ஏனைய ஆயுதங்களையும் பறித்து முறித்தெறிந்தான். ஆயுதங்கள் அனைத்தையும் இழந்த அவள் கைகளால் அனுமனைத் தாக்க முற்பட்டாள். ஆனால் அனுமனோ, அவள் கைகளை ஒரு கையால் பிடித்துக்கொண்டு கன்னத்தில் ஓர் அறை அறைந்தான். அறையுண்ட இலங்கினி அலறிக்கொண்டு கீழே விழுந்தாள். வலி தாங்கமாட்டாது உயிர்ப் பிச்சை கேட்கலானாள். மேலும், தன்னைப்பற்றிய விவரத்தினையும் உரைக்கலானாள்.

"என் பெயர் இலங்காதேவி. பிரமன் கட்டளைப்படி இந்த நகரை நான் காத்து வருகின்றேன். இந்த நகரைக் காக்கும் காலம் இன்றுடன் முடிந்துவிட்டது. 'ஒரு குரங்கு உன்னைக் கையால் தாக்கி வீழ்த்தியபோது என்பால் மீண்டும் வருக' என்பது பிரமனின் கட்டளை. அந்நிகழ்ச்சி இன்று நடந்து முடிந்தது. 'அறம் வெல்லும்; மறம் தோற்கும்' என்ற மறைமொழி உண்மையாதலால் உன் விருப்பம் அனைத்தும் நிறைவேறும். இரக்கமற்ற அரக்கரின் உறைவிடமான இவ் இலங்காபுரி விரைவில் அழிந்தொழியும். நீ நகர்க்குள் ஏகுவாயாக" என்று கூறிப் போனாள்.

'அறம் வெல்லும், மறம் தோற்கும்' என்று நம்பிய அனுமனும் ராமநாமத்தை உச்சரித்துக் கொண்டு மதிலைத் தாண்டி நகரத்தினுள் குதித்தான். அனுமன் இலங்கையினுள் புகுந்ததைப் பெரிய பாற்கடலுள் மோர்த்துளி சிந்தியதுபோல் என்கிறான் கம்பன். (பால் எவ்வளவு மிகுதியாய் இருந்தாலும் அதில் ஊற்றப்படும் துளி மோரானது பின்னர் பால் முழுதிலும் பரவி அதன் சுவையினை மாற்றிப் புளிக்கச் செய்தல் போல, பெரிய இலங்கை நகரினுள் புகுந்த சிறிய உருக்கொண்ட அனுமன், பின்னால் அந்நகர் முழுதும் திரிந்து நெருப்பிட்டு அலங்கோலப்படுத்தப் போவதை முன் கூட்டியே குறிக்கின்ற பாங்கில், 'சீரிய பாலின் வேலைச் சிறு பிரை தெளித்ததன்னான்' என்று குறிக்கின்றான் கம்பன்.) நகரத்தினுள் குதித்த அனுமன் சீதையைத் தேடும் பணியில் உடனே ஈடுபட்டான். தன் வடிவினை மிகமிகச் சிறிதாகச் சுருக்கிக்கொண்டான். ஓரிடம் விடாது கண்ணிற் கண்ட இடங்களிலெல்லாம் தேடுகின்றான். தேனை நாடி மலருக்கு மலர் செல்லும் வண்டினைப்போல் சீதையைத் தேடி இடம் விட்டு இடம் செல்லுகிறான். மாட மாளிகைகள், கூடகோபுரங்கள், ஆனைக்கூடங்கள், குதிரைலாயங்கள், பசுத்தொழுவங்கள், தேர் நிலையங்கள், வணிகர் கடைகள், பூஞ்சோலைகள் முதலிய இடங்களிலெல்லாம் தேடித் தேடிப் பார்க்கின்றான்.

"ஆத்துறு சாலைதோறும்,
ஆனையின் கூடம் தோறும்
மாத்துறு மாடம்தோறும்,
வாசியின் பந்திதோறும்,
காத்துஉறு சோலைதோறும்,
கருங்கடல் கடந்த தாளான்,
பூத்தோறும் வாவிச் செல்லும்
பொறிவரி வண்டின், போனான்."

இங்ஙனம் இடம் இடமாகத் தேடிச் செல்லுகையில் கும்பகர்ணன் மாளிகையை அடைகிறான் அனுமன். ஒரு பெரிய மண்டபத்தின் மத்தியிலுள்ள மலர்ப்படுக்கையில் உறக்கத்திற்குப் பெயர்போன கும்பகர்ணன் ஆழ்ந்த துயிலில்

மூழ்கியிருந்தான். அவனைக்கண்ட அனுமன் இராவணனோ என ஐயுறுகிறான். பத்துத்தலை களும், இருபது கைகளும் இல்லாமையினால் இராவணனல்லன் என்ற முடிவுக்கு வருகிறான். அங்கிருந்து புறப்பட்டு மாடமாளிகைகள், மக ளிர் ஆடலரங்குகள், தேவாலயங்கள், பட்டி மண்டபங்கள், பள்ளிக்கூடங்கள் முதலிய இடங்களிலெல்லாம் சீதையைத்தேடிச் செல்லு கின்றான்.

அவ்வாறு தேடிச் சென்ற அனுமனுக்கு ஒரு கற்பகச் சோலை தென்படுகின்றது. அதன் மத்தியிலிருந்த பவளமாளிகையினுள் பளிங்கு மேடையின்மேல் விபீஷணன் உறங்கிக்கொண் டிருந்தான். தருமதேவதை தன் சுயரூபத்தில் வந்தால் இலங்கையர்கோன் அனுமதியான் என்று கருதி, அரக்க உருவில் விபீஷணனாக இலங்கையில் இருப்பதுபோன்று தென்பட்டது. அருகில் சென்று கூர்ந்து நோக்கி விபீஷண னின் உயர் குணங்களையெல்லாம் உள்ளபடி அறிந்துகொள்ளுகிறான். எவருக்கும் தீங்கு நினையாத தர்மாத்மாவாதலால் இவ்வுத்தமன் அனைவராலும் விரும்பப்படுவான். இவன் இல்லம் செந்தண்மை மிக்க அந்தணர்களுடைய இருப்பிடம்போன்று இருக்கிறது என்று கருதுகிறான்.

பின்னர் அனுமன் அங்கிருந்து புறப்பட்டுத் தேவேந்திரனைச் சிறைவைத்த இந்திரஜித்து வின் மாளிகைக்குச் செல்கின்றான். முருகனோ என்று ஐயுறும்படி அழகும் வீரமும் ஒருங்கே பொருந்திய இந்திரஜித்து உறங்கிக்கொண் டிருப்பதைக் காணுகின்றான். இம்மாவீரனைப் போரில் வெல்லுதற்கு இராம இலக்குவர் பலநாள் போரிட நேரிடும் என்று கருதுகின் றான். சிங்கத்தின் வலிமை மிக்க இந்திர ஜித்துவைப் பார்த்த அனுமனுக்கு இராவண னின் வெற்றிப் பிரதாபங்களெல்லாம் பிரமாத மாகத் தோன்றவில்லை. இத்தகைய அசகாய சூரனைப் போர்த்துணைவனாகப் பெற்ற இராவ ணன், மூன்று உலகங்களையும் வென்று வாகை சூடியதில் வியப்பேதுமில்லை என்று கருது கிறான். பின்னர் அவ்விடம் விட்டு நீங்கி ஏனைய இராவணகுமாரர், இராக்கதசேனாவீரர், அமைச்சர் முதலியோருடைய மாளிகைகளி லெல்லாம் நுழைந்து சீதையைத் தேடுகின்றான்.

இவ்வாறு தேடிக்கொண்டே சென்ற அனுமன் மண்டோதரியின் மாளிகைக்கு வந்து சேரு கிறான். இந்த மாளிகை இராவணனுடைய ஏனைய மனைவியர் மாளிகைகள் அனைத்தி லும் சிறந்து விளங்கியது. ஜோதி மயமான ரத்தின தீபங்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் இப்பொன்மயமான மாளிகையின் மத்தியில், வெண்மலர்ப் படுக்கையில் துயில்கொண்டி ருந்த பேரழகி மண்டோதரியைச் சீதையென்றே நினைக்கிறான் அனுமன். ஆனால் அந்த நினைவு நீண்டநேரம் நிலைத்து நிற்கவில்லை. தன் கருத்தை உடனே மாற்றிக்கொள்ளுகிறான். 'இராமபிரான் அன்பிற்குப் பாத்திரமான சீதா தேவி இத்தகையச் சுகபோகத்தில் இருக்கமாட் டாள். சீதைக்குரிய லக்ஷணங்களுள் சிலவே இவளிடத்துக் காணப்படுகின்றன. சீதை மானுடவடிவினள்; ஆனால் இவளோ வேறுவடி வினளாய் இருக்கின்றாள். இவளைச் சீதை யென்று சந்தேகித்தது தவறு' என்று கருதி அவ்விடம்விட்டு நீங்கி அருகிருந்த இராவணன் அரண்மனையினுள் நுழைகிறான்.

வயிரக்கல் பதித்துப் பொன்வேய்ந்த பள பளக்கும் மிகப்பெரிய மாளிகையினுள், விசால மான வெள்ளிய மலர்ப்பள்ளியில் கரிய பெரிய உருக்கொண்ட இராவணன், பாற்கடல்மீது ஒரு கருங்கடல் கிடந்தாற்போல் சயனித்திருந் தான். (இதனைப் பாற்கடலில் பாம்பணையின் மேல் திருமால் பள்ளிகொண்டிருத்தலோடு ஒப் பிடுகிறான் கம்பன்) வீரம் விளங்கும் அவன் அகன்ற மார்பில் அணிந்திருந்த இரத்தினமாலை அவன் திக்விஜய வெற்றியினைப் பறைசாற் றிக்கொண்டிருந்தது. அவன் பத்துத் தலை களும் இருபது கைகளும் அவனை இராவண னென்று அனுமனுக்கு அறிவித்தன. காமத்தீ யில் வெந்துகொண்டிருக்கும் அவன் அழிவை அனுமன் மிக அருகில் கண்டான். படிப்படி யாக அனுமன் சிந்தனை மாறிற்று. சீதையைக் கவர்ந்த கள்வன் என்கிற எண்ணம் மேலோங் கிற்று. அவன் நெஞ்சத்துப் பெருங்கோபம் பொங்கி எழுந்தது. எரிமலை குமுறுவதுபோன்று அவன் கண்களிரண்டும் நெருப்பைக் கக்கலா யின. தீப்பொறி பறப்பது போன்று அவன் வாயினின்றும் வீர வார்த்தைகள் வெளிப் படலாயின: "இவன் புயங்களின் வலிமை

யாது பயனைத்தரும்? நெடுங்காலமாக நிலைத்து நிற்கும் இவன் புகழ்தான் என்ன பயனைத் தரும்? இவ்விரண்டும் எதற்கும் பயன்படாது அழியப்போகின்றன. சீதையை வஞ்சனையால் கவர்ந்த இக்கள்வனின் கிரீடங்கள் பத்தையும் என் கால்களால் உதைத்துத் தள்ளி, அக்கிரீடங்கள் அணியப்பெற்றுள்ள தலைகள் பத்தினையும் உடைத்தெறிந்து, என் ஆண்மைத் திறத்தினைக் காண்பியாமற் போவேனாயின், நான் இராமனுக்கு அடியேனாகேன்."

தோள் ஆற்றல் என் ஆகும்?
மேல் நிற்கும் சொல் என் ஆம்?
வாள் ஆற்று கண்ணாளை
வஞ்சித்தான் மணி முடி, என்
தாள் ஆற்றலால் இடித்து,
தலை பத்தும் தகர்த்து, இன்று என்
ஆள் ஆற்றல் காட்டேனேல்,
அடியேனாய் முடியேனே!

என்று ஆவேசமாகப் பேசுகிறான். "அடியவன் போலப் புறத்தே வேஷம் போட்டுப் பாசாங்கு செய்து திரிவது உண்மையான அடிமைத் திறமாகாது. என் தலைவன் இராகவனுக்குத் துரோகம் செய்தவனை அழித்தொழித்தலே உண்மையான அடிமைத் திறமாகும். என் எஜமானனுக்குத் துரோகம் செய்த இவனையும், இவனுடைய இந்நகரத்தையும் அழித்தொழிப்பேன். அதன் பின்னர் எனக்கு எத்தீங்கு நேரினும் நேர்க" என்று நினைந்து பல்லைக் கடித்துக் கைகளைப் பிசைந்து கொள்ளுகிறான். ஆனால் குணமென்னும் குன்றேறி நிற்கும் அனுமன் வெஞ்சினம் நெடுநேரம் நிலைத்து நிற்கவில்லை. தர்மாவேசத்தில் பிறந்த சினத்தீ தணிந்து போகிறது. தற்சமயம் தான் செய்ய நினைத்தது இராமன் பணியன்று என்று நினைக்கிறான். சீதையைத் தேடப் புகுந்த செயல் இராவண வதமாகிய வேறொரு செயலாக முற்றுப்பெறலாகாது. நல்லொழுக்கமுடையோர் எவ்வளவு வல்லமை உடையவராயினும் யோஜனை சிறிதுமின்றி ஒரு காரியத்தைச் செய்யத் துணியார். சீதையை வஞ்சனையால் கவர்ந்து சென்று சிறைவைத்த இராவணனை ஒரு புன் குரங்கு கொன்றதென்றால், அது எம்பெருமான் இராகவன் வில்லாண்மைக்கு இழுக்காக முடியுமன்றோ? விஜய கோதண்டபாணியான ராமன் வெற்றியாக முடிய வேண்டிய ராமாயணத்தின் போக்கை, அல்ப குரங்காகிய நான் மாற்ற நினைப்பது அறிவீனம் என்று கருதி அனுமன் சினம் அடங்கினான். சீதாதேவி தென்படவில்லை, மேலும் இங்கு நிற்பதில் பயனேதும் இல்லை என்று கருதி இராவணன் மாளிகையினின்று வெளிப்போந்தான்.

அனுமன் சீதையைக் குறித்துப் பலவாறு சிந்திக்கலானான். துயரம் அவன் உள்ளத்தை ஆட்கொண்டது. எழுநூறு யோசனை அளவு சுற்றிலும் மதில் சூழ்ந்த இவ் இலங்காபுரியில் யான் பாராதவை எவையுமில்லை. உலகனைத்துக்கும் தலைவனாகிய ஸ்ரீ ராமபிரானின் மனைவியாகிய சீதையை மட்டும் கண்டிலேன். கடலைக் கடந்து வந்த யான் சீதையைக் காணப் பெறுமை என்கிற துன்பக்கடலைக் கடக்க மாட்டாமல் அதில் வீழ்ந்து அழிவேனோ? கொடிய அரக்கனை இராவணனைப் பிடித்து, கல்லையும் உடைக்கவல்ல என் கைகளால் அவன் கன்னத்தில் அறைந்து ரத்தத்தைக் கக்குமாறு செய்து சீதையைக் காட்டு எனக் கேட்கட்டுமா? கூர்மையான வேலாயுதத்தைக் கையில் ஏந்திய இராவணனையும், அவன் இலங்கை மாநகரையும் வெந்தழலில் இட்டு அரக்குபோல் உருகும்படி செய்யட்டுமா? கழுகரசனை சம்பாபதி "சீதாபிராட்டியை இராவணன் சிறையெடுத்துச் சென்றான். இலங்கையில் சீதை சிறை வைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறேன்" என்று கூறியதும் பொய்யா? அது பொய்யாக இருக்கமுடியாது. நான் சீதையைக் கண்டு வருவேன் என்றிருப்பான் இராமன். சுக்ரீவனோ நான் சீதையைப் பற்றிய நற்செய்தி கொண்டு வருவேன் என்றிருப்பான். என்ன செய்வது? இலங்கை முழுதும் தேடியும் சீதையைக் காணப் பெறவில்லையே! பஞ்ச பூதங்கள் அறிய, உலகோர் யாவரும் அறிய இராவணன் வஞ்சனையால் சீதையைக் கவர்ந்து வந்தான் என்பது பொய்யாகாது. ஆதலால், கடல்சூழ்ந்த இந்த இலங்காபுரியைப் பெயர்த்து எடுத்து இப்பெரிய கடலிலுள்ளே போட்டு மூழ்கடித்து விட்டு, அதோடு இந்த இராவணனையும் அழித்து விட்டுப் பின்னர் என்னையும் அழித்துக்கொள்வேன் என்று கருதுகிறான்.

---

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 126

726. **सनकादि समाराध्या ஸனகாதி ஸமாராத்யா** — ஸனகன் முதலிய சான்றோர்களால் இனிது ஆராதிக்கப்படுகின்றவள் என்பது இந்த நாமத்தின் கருத்து.

ஸனகன், ஸனந்தனன், ஸநாதனன், ஸனத் குமாரன் ஆகிய நால்வரும் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவனுடைய மானச புத்திரர்கள் ஆவார்கள். யோகத்தின் உச்ச நிலையை யெட்டியவர்கள் இவர்கள். இவர்களை மகரிஷிகள் என்று மொழிவதும் பொருந்தும். குறைவு இல்லாநிறைவு நிலையிலேயே பிறப்பு எடுத்தவர்கள். பிரவிருத்தி மார்க்கத்திற்கும், இவர்களுக்கும் வெகுதூரம். மேனி தாங்கிய நாள் முதற் கொண்டு காலமெல்லாம் இவர்கள் நிவிருத்தியிலேயே நிலைத்திருப்பவர்கள். தீவிர உபாசனைக்கு இந்நால்வர்களும் யாண்டும் முன் மாதிரிகளாக இலங்குகின்றார்கள். இத்தகைய பரிபூரணத்தை எட்டியுள்ள இந்நால்வர்க்குக் குருவாக வீற்றிருப்பவர் தக்ஷிணாமூர்த்தி. சிவனார் படைத்துள்ள பலப்பல சொரூபங்களில் தக்ஷிணாமூர்த்தி சொரூபம் உச்சநிலையெய்துகிறது. ஜகத் முழுதுக்கும் அவரே குரு ஆகிறார். ஆதலால் அவர் ஜகத்குரு எனப் போற்றப்பெறுகிறார். உயிர்கள் அனைத்திடத்தும் அவர் கருணை பூண்டிருப்பதால் அருள் குரு எனவும் இயம்பப்பெறுகிறார். காலாதீதத்தில் இருப்பதால் அவர் யாண்டும் யௌவனத்தில் அல்லது இளமையில் நிலைத்திருக்கிறார். அவரை உபாசிக்கிற நால்வரோ வாழ்க்கை சம்பந்தமான அனுபவங்கள் யாவையும் மானசிகமாகவே உணரப்பெற்றவர்கள் ஆவார்கள். உலக அனுபவத்தில் மிக மிக முதிர்ந்திருப்பதால் இவர்கள் விருத்தர்களாகக் காட்சி கொண்டிருக்கின்றார்கள். இவர்களுக்கு உலக அனுபவங்கள் யாவும் மானசீகமாகவே வந்து வாய்த்ததற்குக் காரணம் அம்பிகையின் உபாசனையாம். அம்பிகையோ அண்ட கோடிகளின் அனைத்து சொரூபமாயும் அதற்கு அப்பாலும் இருக்கிறாள். அத்தகைய மேலாம் மூர்த்தியை நால்வரும் சர்வகாலமும் உபாசிப்பவர்களாகவே இருந்து வருகிறார்கள். அந்த உபாசனையின் விளைவாகவே அவர்கள் அனுபவத்தில் விருத்தர்களாக விளங்குகிறார்கள். அதனால் அம்பிகையை வழிபட முயலுகிறவர்கள் அனைவரும் இந்த நால்வரை முன் மாதிரியாக வைத்துக் கொள்வது முறை என்பதை இந்த நாமம் விளக்குகிறது.

727. **शिवज्ञान प्रदायिनी சிவஞான ப்ரதாயினீ** — சிவ ஞானத்தை நன்கு எடுத்து வழங்குபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பிறந்த குழந்தை யாரும் புகட்டாமல் தானாகவே தன் தாயை அறிந்து கொள்ளுகிறது. நாளடைவில் தாயின் துணைகொண்டு அது தந்தையை அறிகிறது. 'அன்னையைச் சரண் புகுந்தால் அதிகம் வரம் பெறலாம்' என்பது கோட்பாடு. சரண்புகுகிறவருடைய தகைமைக்கு ஏற்பத் தாயானவள் வரத்தை வழங்குகின்றாள். இக்கோட்பாடு காளிகாதேவியின் சொரூபத்தில் நன்கு அமையப் பெற்றிருக்கிறது. நான்கு கரங்கள் உடையவளாக ஸ்மசானகாளி அமைந்திருக்கிறாள். இடக் கரங்களிரண்டாலும் அவள் மக்களைக் கொன்று கொன்று பிறவிக் கடலில் ஆழ்த்துகிறாள். பல பிறவிகள் எடுத்து அதில் பயிற்சி பெற்றவர்கள் பிறகு அம்பிகையைச் சார்கிறார்கள். சாருதற்கேற்ப அவர்கள் அச்சத்தை அகற்றுகிறார்கள். அதற்கு அறிகுறியாக அவள் தூக்கிய கரத்தில் அபயம் பூண்டிருக்கிறாள். அன்னையை முறையாக அணுகுபவர்களுக்குப் பயம் ஏதுமில்லை. அதுவே அபயகரத்தின் அறிகுறியாகும். அடுத்த கரம் கீழே சவம் போன்று படுத்துக் கிடக்கும் சிவ மூர்த்தியைச் சுட்டிக் காட்டுகிறது. அம்பிகையை வழிபட்டு முற்றிலும் பக்குவமடைந்தவர்கள் அம்பிகையின் அருளால் பிறகு சிவத்தின்பால் அனுப்பப்பெறுகிறார்கள். அதை விளக்குகிற கரம் வரகரம் என இயம்பப்படுகிறது. வரங்களுள் சிவனை அடைதற்கு நிகரான வரம் வேறு ஏதுமில்லை. சிவனை அடைகிறவர்கள் இயல்பாகவே சிவ ஞானத்தையும் அடையப் பெறுகிறார்கள். இதைக் கிருபை கூர்ந்து அம்பிகை நல்கி வருவதால் அவள் சிவஞானப்ரதாயினீ என்னும் நாமம் படைத்துள்ளாள்.

728. चित्कला சித்கலா—ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட கலைகள் மயமாய் இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள். அன்னை பராசக்தியும் பரப்பிரம்மமும் மூலநிலையில் சத் சித் ஆனந்த சொரூபம். அது தன்னில் தானாய் இருக்கும் பேரறிவு பரமானந்த நிலை. கருவி கரணங்களுக்கு அது எட்டாதது. பின்பு ஜீவாத்மாக்கள் அறிந்து கொள்ளுதல் பொருட்டுப் பேரறிவின் ஒருபகுதி பலப்பலக் கிரணங்களாகக் கீழிறங்குகிறது. பின்பு பலப்பல கலைகளாகத் திகழ்கிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சூரியனுடைய கிரணம் வெட்டவெளியில் பாய்கிறபொழுது கட்புலனாவதில்லை. நீர் செறிந்த மேகத்தின் வழியாக அது பாய்கிற பொழுது ஏழு நிறங்களாக அது சிதறடைகிறது. இந்த ஏழு நிறங்கள் சூரிய கிரணத்தின் சித் கலைகளாகின்றன. வெறும் கலைகள் என்று சொன்னால் போதுமே. அதை ஏன் சித்கலை என்று சொல்ல வேண்டும்? சூரிய வெளிச்சமில்லாவிட்டால் ஏழு நிறங்கள் தென்படமாட்டா. இரவில் நாம் வானவில்லைக் காண்பதில்லை. பகலில்தான் அதனைக் காண்கின்றோம். ஏழு நிறங்களாகச் சிதறடைகிற சூரிய கிரணத்தைச் சிதறடையாதசூரியகிரணம் விளக்குகிறது. அதேபாங்கில் கலைமயமாக இருக்கிற அறிவுக்கு ஆதாரமாகச் சித் சொருபமிருக்கிறது. ஆடுதல், பாடுதல், பேசுதல், ஓவியம் தீட்டுதல், வடிவங்களை உருவாக்குதல் ஆகியவைகள் கலைகளாகின்றன. அக்கலைகளை உருவாக்குவதே அறிவின் செயல். பின்பு அக்கலைகளை ரசிப்பதற்கு மூல அறிவாகிய சித் சொரூபம் தன்மயமாயிருக்கிறது. மானுடனொருவன் திறமையோடு பேசுகிறான். அத்தகைய பேச்சு அவன் படைத்துள்ள அறிவின் விளக்கமாம். தான் பேசிய பேச்சைப் பிறகு தானே மதிப்புப் போடுகிறான். மதிப்புப் போடும் அறிவு மூல அறிவு. அது சித் சொருபம். பேசும் திறமை கலைமயமான அறிவு. கலைமயமாகக் கிளம்பி வருகிற சாதாரண அறிவைத் தன்மயமாயுள்ள பேரறிவு துவக்கிக் கொடுக்கிறது. பின்பு அதை ரசிக்கிறது.

ஓவியம் தீட்டுகிற ஒருவன் சுவரின் மீது அல்லது சேலையின்மீது நிறங்களைத் தீட்டுகிறான். அச்செயலைச் செய்கிறபொழுது அவன் கலா சொருபமாக இருக்கிறான். ஓவியத்தை வரைந்தான பிறகு அவன் எட்டவந்து நின்றுகொண்டு அக்கலையை ஆராய்கிறான் அல்லது ரசிக்கிறான். ஆராயவும் ரசிக்கவும் செய்கிற பகுதி அவனிடத்துள்ள சித்சொருபம். ஓவியமாக வடிவெடுத்திருப்பது அவன் பெற்றுள்ள கலை.

இக்கோட்பாடு அகிலாண்ட நாயகிக்கும் பொருத்தமாயிருக்கிறது. அவள் சிதாகாசமாக யாண்டும் வீற்றிருக்கிறாள். அதன்மீது அண்டங்கள் வடிவெடுக்கின்றன. அண்டங்கள் வடிவெடுப்பது அவளுடைய கலை. அண்டங்களுக்கு ஆதாரமாயிருப்பது அவளுடைய சித் சொருபம். ஓசையாகவும் அந்த ஓசையினின்று இன்னிசையாகவும் மொழியாகவும் அம்பிகை இலங்குகின்றாள். இன்னிசையும், மொழியும் அவள் படைத்துள்ள கலைகள். அக்கலைகளுக்கு ஆதாரமாயிருப்பது அவளுடைய சித் சொருபம். அறுசுவைகளை உருவாக்குவது அம்பிகையின் கலைத்திறமை. அறுசுவைகளை ரசிப்பது அம்பிகையின் சித் சொருபம். தேவ கணங்களையும், நர கணங்களையும், அசுர கணங்களையும், பூத கணங்களையும் உருவாக்குவது அம்பிகையினுடைய கலை வல்லமையாம். அவையாவுக்கும் ஆதாரமாயிருப்பது அவளுடைய சித் சொருபமாம். இங்ஙனம் சித் கலை மயமாக அம்பிகையிருந்துகொண்டு பிரபஞ்சம் என்னும் எண்ணிறந்த கலைகளுக்கு அவள் ஆதாரமாயும் ஆதேயமாயும் இருந்து வருகிறாள் என்னும் மகிமை சித் கலா என்னும் அவளுடைய நாமத்தில் அடங்கியிருக்கிறது.

729. आनन्दकलिका ஆனந்தகலிகா—ஆனந்தத்தின் கிளைகளாக உத்பவிப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அன்னை பராசக்தி பேரறிவு என்னும் அடிமரமாயிருந்துகொண்டு எண்ணிறந்த கலைஞானங்கள் என்னும் அறிவுக்கிளைகளாக மிளிர்ந்துகொண்டிருக்கிறாள் என்பது மேலே சொல்லிய நாமத்தின் பொருளாகும். சின்மயமாயுள்ள அம்பிகை ஆனந்தமயீயாகவும் இலங்குகின்றாள். பிரபஞ்ச முழுதும் ஆனந்தத்தில் திளைத்திருக்கிறது என்றால் அத்தனை விதமான ஆனந்தங்களும் பேரானந்த மயமாக இருக்கிற பராசக்தியிடத்திருந்து தோன்றி வந்தவைகளாம்.

ஆனந்தம் பிரம்மம் என்பது உபநிஷத வாக்கு. அந்த ஆனந்தம் அகிலமெங்கும் அனந்தங்கோடி வடிவெடுத்து இலங்குகிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சர்க்கரையினிடத்துத் தித்திப்பு இருக்கிறது. சர்க்கரையை வெவ் வேறு பண்டங்களோடு சேர்ப்பதன் வாயிலாக அதன் சுவைக்குப் பலப்பல பாங்குகளைத் தரு வது சாத்தியம். பாகு ஒருபாங்கில் சுவைக் கிறது. கற்கண்டு ஒரு பாங்கில் சுவைக்கிறது. சர்க்கரை கலந்த பானங்கள் விதவிதமாகச் சுவைக்கின்றன. சுவைத்தல் என்னும் விஷயா னந்தம் இப்படி விரிவடைந்துகொண்டு போகி றது. இயற்கையின்கண் எண்ணிறந்த வடிவங் கள் இருக்கின்றன. வடிவங்களைக் கண்டு மகிழ்ந்திருப்பது கண் என்னும் இந்திரியத் தைத் துணையாகக்கொண்டு ஆனந்தம் பலவாக விரிவடைகிறது. இதற்கெல்லாம் மேலாக ச்ரோத்ரம் என்னும் காது இந்திரியத்தைக் கருவியாக வைத்துக்கொண்டு எண்ணிறந்த இன்னிசைகளைக் கேட்டு ஆனந்தமடைதல். மொழி அழகைக் கேட்டு மகிழ்ந்திருப்பது, கருத் தழகைக் கேட்டுக் காமுறுவது, இப்படிக் கணக் கற்ற வடிவங்களில் ஆனந்தம் விரிவடைகிறது. ஆதலால் பேரானந்த சொருபிணியாக இருக் கிற அம்பிகை பிரபஞ்சமெங்கும் இந்திரியங்கள் மூலமாக நுகரும் இன்பங்களாக அரும்பிக் கொண்டிருக்கிருள். அரும்பு விரிகின்றபொழுது மலராகிறது. அவள் தன்மயமாயிருக்கிற பொழுது மலர் என்ருல் பிரபஞ்சமயமாயிருக் கின்றபொழுது அரும்பு ஆகவும் போது ஆகவும் பிரகாசித்துக்கொண்டிருக்கிருள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

**730. प्रेमरूपा பிரேமரூபா**— பேரன்பு வடி வினள் என்பது இதன் பொருள்.

பிரபஞ்ச முழுதும் அன்பே வடிவெடுத்து இருக்கிறது. அதற்குச் சான்று எல்லாப் படித் தரங்களிலும் காணலாம். ஜடப்பொருள்களாக இருக்கிற சந்திரன், சூரியன், பூமி முதலிய கிர ஹங்கள் ஒன்றை யொன்று கவர்ந்திழுக்கின் றன. ஆகர்ஷணம் என்று பெயர் பெற்ருலும் அது அன்பின் தோற்றமேயாம். தாய்ப் பறவையும் குஞ்சும் காட்டிக்கொள்ளுகிற பரஸ்பர அன்பு பாராட்டுதற்குரியதாகும். அதே விதத்தில் விலங்குகளும், குட்டிகளும் அன்பு சொருபமாக இலங்குகின்றன. இனி மானுட உலகைப்பற்றி இயம்பவேண்டிய அவசியமில்லை. அன்பின் விளைவாகவே சமுதாய வாழ்வு இனிது நிகழ்ந்து வருகிறது. அன்பில்லாத குடும்பம் நரகத்துக்கு நிகராகிவிடும். பெற்ருேர்க்கும், பிள்ளைகளுக்கு மிடையே உள்ள அன்பு ஆழ்ந்ததாகும். இத் தகைய அன்பு தூய அன்பாக மாறுகிறபொழுது அதைத் தொடர்ந்து தெய்விகமும் தானுகத் திகழுகிறது. தூய அன்பில் போட்டிக்கும் பொருமைக்கும் இடமில்லை. எத்தனைபேர் ஒன்றுகூடிப் பேரன்பில் கலந்துகொள்ளுகிருர் களோ அதற்கேற்றவாறு பரமானந்தமும் ஓங்கு கிறது. அன்பு அச்சத்தை அகற்றுகிறது. மேல் நிலைக்கு வந்துள்ள அன்பு மரணத்தைத் துணிந்து எதிர்க்கிறது. அன்பு தியாக சொரு பம். பக்தனெருவன் தன்னுடைய அனைத்தை யும் தான் வழிபடுகிற தெய்வத்துக்குத் தரு கிருன். தெய்வத்திடமிருந்து தான் எதையும் கேட்பதில்லை. இதற்குமேல் அன்பு பிரேமை வடிவெடுக்கிறபொழுது ஜீவாத்மனுடைய ஜீவ வியக்தி படிப்படியாகக் கரைந்துபோகிறது. கடலினுள் நீராடுதற்கு நுழைந்துள்ள உப்புப் பொம்மை சிறிது சிறிதாகக் கரைந்து தன் வடி வத்தை இழந்து கடல் மயமாகிறது. அங்ஙனம் பக்தன் தன் பாங்குகளனைத்தையும் தெய்வத்தி னிடம் ஒப்படைத்து அந்தத் தெய்வ சொருபமாக மாறுகிருன். இதற்குச் சிறந்த எடுத்துக்காட் டாக வாய்த்தவர்கள் ஆயர்பாடி சிறுமிகளாகிய கோபிமார்கள். அன்னவர்கள் தாங்கள் படைத் திருந்த மானுடப் பெற்றிகளை யெல்லாம் பறி கொடுத்தனர். அத்தனை பேரும் கண்ணன்மய மாக மாறினர். இது பிரேமை பக்தியின் விளைவு. இதற்குமேல் அடைவதற்குக் குறிக் கோள் ஏதுமில்லை. சித்த மலம் அறுவித்துச் சிவமாக்குதற்கு மேல் ஜீவன் ஒன்றும் செய்ய முடியாது. ஓயாது உள்கி உள்கி உள்ளன்பு மயமாக உள்ள பக்தன் பரம்பொருள் மயமாக அதில் லயமாகிருன். அன்னை பராசக்தி இத் தகைய பேரன்பு மயமாயிருப்பதால் அவள் பிரேமரூபா என இயம்பப் பெறுகிருள்.

---

**28—2—79 புதன்கிழமையன்று ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஜன்ம தினமாகும்.**

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A. )

"ஏகம் ஸத், விப்ரா பஹுதா வதந்தி"—சத்தியம் ஒன்றுதான். அச்சத்தியத்தை மக்கள் பல சமயப் பொருள்களாகவும், பல தெய்வங்களாகவும் பிரித்து வணங்குகின்றார்கள் என்பது ஆன்றோர் கருத்து.

இறைவன் ஒருவன்தான்; நாம் அறிவோம். ஆனால் அவரவர் விருப்பத்திற்கு இணங்க அவ் இறைவனைச் சிவன், முருகன், திருமால் என்றெல்லாம் பெயர் இட்டுப் போற்றி வணங்குகிறோம்.

சங்க இலக்கியங்களில் திருமால் பற்றிச் சொல்லப்படும் செய்திகளை நாம் தொடர்ச்சியாகப் பார்த்து வருகின்றோம்.

"ஆல் அமர் கடவுள்" [புறநானூறு 198]- ஆல இலையின் மேல் பள்ளிகொண்ட திருமால் எனப் புறநானூறு திருமாலைப் போற்றுகிறது.

ஊழிக்காலத்தில் இப்பிரபஞ்சம் முழுவதையும் ஒடுக்கிய பிறகு, திருமால் ஒரு சிறு குழந்தையாக ஆலமரத்து இலையின்மீது பள்ளிகொண்டிருப்பான் எனப் புராணம்கூறும்.

அனந்தன் என்பது பரமாத்மாவுக்கு உரிய பெயர்களுள் ஒன்று. எல்லையில்லாதவன் என்று இதற்குப் பொருள். எல்லையில்லாத அந்தப் பரமாத்மாவில் இருந்து இந்தப் பிரபஞ்சம் தோற்றத்திற்கு வந்தது; எந்தப் பரமாத்மாவில் இருந்து வந்ததோ அந்தப் பரமாத்மாவிலேயே இப்பிரபஞ்சம் ஒடுங்கிவிடும் என்பது ஒரு சாராரின் கொள்கை.

அவ்வாறு பிரபஞ்சம் முழுவதையும் ஒடுக்கியான பிறகு அப்பரமாத்மாவே திருமாலாக ஆல் இலையில் பள்ளிகொண்டிருப்பதாகவும் கூறுவார்கள்.

பரமாத்மா அனந்தன்; எல்லையில்லாதவன். அதேபோல, பிரபஞ்சமும் எல்லை அற்றது. பரமாத்மாவில் இருந்து பிரபஞ்சம் பிரிந்து தோற்றத்துக்கு வரும்போது பரமாத்மாவுக்கு எவ்விதக் குறைபாடும் ஏற்படுவது இல்லை. அதேபோல, பிரபஞ்சம் மீண்டும் பரமாத்மாவில் போய் ஒடுங்கும்போது, பரமாத்மா கூடுவதும் இல்லை.

உபநிடதங்களுள் பத்து உபநிடதங்கள் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. அப் பத்து உபநிடதங்களில் பிருஹதாரண்யம் என்பது ஓர் உபநிடதம். பிருஹத்-பெரிய; ஆரண்யம்-காடு. தத்துவக் கொள்கைகளை விளக்குவதில் பெரிய காடு என்பது பொருள். அந்தப் பிருஹதாரண்ய உபநிடதத்தில் மேற்கண்ட கருத்துச் சொல்லப்படுகிறது.

"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்"—மாயோனாகிய திருமாலைப் போன்ற உயர்ந்த மலையின் சாரல் என நற்றிணை [பாடல்: 32] என்ற சங்க நூல் கூறுகிறது.

ஆம்! மாயோனாகிய திருமால் உயர்ந்தவன். எல்லையற்ற பரம்பொருள் அவன். அவனுடைய திருமேனியின் நிறம் பச்சை. "பச்சைமா மலை போல் மேனி" என்கிறார் ஆழ்வார் ஒருவர். திருமாலின் திருமேனியைப் போன்று, மலைச் சாரலும் பசுமை வாய்ந்ததாக அமைந்துள்ளது.

இன்னொருவிதமாகவும் கூறலாம். "அளக்கலாகா அளவினை உடையது மலை" என நன்னூல் கூறுகிறது. அளந்து கூறமுடியாதது மலை. அளந்து கூறமுடியாத அளவற்ற பரம்பொருள் திருமால்.

பாஸ்கராச்சாரியார் என்பவர் சிறந்த கணித மேதை. "லீலாவதி" என்ற கணித நூலை அவர் எழுதியுள்ளார். அந்நூலில் மங்கள ஸ்லோகம் பாடியுள்ளார்.

கணிதத்தில் Infinity என்று உண்டு. முடிவு இல்லாதது என்பது பொருள். பாஸ்கராச்சாரியார் இதனை, "கஹரம்" எனக் கூறுகிறார். கம் என்றால் பூஜ்யம். ஹரம் என்றால் வகுத்தல். பூஜ்ஜியத்தை வகுக்கும் [Division] எண்ணை வைத்துக்கொண்டு எவ்வளவு பெரிய எண்ணை வகுத்தாலும், ஈவு எல்லை இல்லாத ஒன்றாக வருகிறது. "கணிதப்படி வருகின்ற அந்த எல்லையற்ற பரமாத்மாவுக்கு வணக்கம் சொல்லுகின்றேன்" என்கிறார் பாஸ்கராச்சாரியார்.

எனவே, பரம்பொருள் எல்லையற்றது என்ற இந்து மதத் தத்துவம் சங்க நூலாகிய நற்றிணையில் ஒருவிதத்தில் கூறப்படுவதைக் காணலாம்.

“வண்டு ஊது பொலிதார்த் திருஞெமர் அகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரல் துழாஅய்
அலங்கல் செல்வன்”

—வண்டுகள் ரீங்காரம் செய்கின்ற பொன்னிற மலர்மாலையை அணிந்த திருமகளாகிய இலக்குமி வீற்றிருக்கும் மார்பினை உடையவன்; கண்களைக் கொள்ளை கொள்ளும் சுதர்சனம் என்னும் சக்கரப்படையை உடையவன். நன்ருகத் தழைத்து மணம் வீசுகின்ற துளசி மாலையை அணிந்தவன். இத்தகைய சிறப்பு மிக்க திருமாலின் திருவடிகளை மக்கள் போற்றி வணங்குகின்றனர் எனப் பதிற்றுப்பத்து என்னும் சங்கநூல் [பாடல் 31.] கூறுகின்றது.

பொன்னிற மலர்மாலை அணிந்த இலக்குமி திருமாலின் மார்பினில் வீற்றிருக்கிருள் என இங்கே குறிப்பிடப்படுகிறது. திருப்பாற் கடலில் ஆதிசேஷனுகிய பாம்புப் படுக்கையின் மீது பள்ளிகொண்டிருப்பவர் திருமால். அவருடையமார்பிலே இலக்குமி வீற்றிருக்கின்ருள்.

இங்கே இன்னெரு கருத்தும் நினைக்கத் தக்கது. “தரங்கக் கடலுள் வெங்கண் பணி அணைமேல் துயில் கூரும் விழுப்பொருளே”— திருப்பாற்கடலில், ஆதிசேஷனுகிய பாம்புப் படுக்கையில் யோகநித்திரை செய்யும் மேன்மை பொருந்திய பராசக்தியாகிய அபிராமி அம்மையே! என அபிராமிப்பட்டர், அபிராமி அந்தாதியில் பாடுகின்ருர்.

முன்பு சொன்ன பதிற்றுப்பத்து சங்க நூலில் பாம்புப் படுக்கையில் திருமால் பள்ளி கொண்டிருக்கிருர் எனக் குறிப்பிடப்படுகிறது. இங்கே அபிராமிப்பட்டர் அம்பிகை பள்ளி கொண்டிருப்பதாகப் பாடுகிருர்.

அபிராமிப்பட்டர் சொன்னதற்கு விளக்கமாகச் சிலர், “பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவின் சக்தியான இலக்குமி” எனப் பொருள் கூறுகின்றனர்.

“அப்படி இல்லை; பராசக்தியே புருஷ ரூபத்தில் விஷ்ணு ஆவாள்” என்று சாக்த மதவாதிகள் கூறுகின்ருர்கள். இதற்கு ஆதாரமாக லலிதா ஸஹஸ்ரநாமத்தில்,“கோப்த்ரீ,கோவிந்த ரூபிணீ,” “விஷ்ணுரூபிணி,” “வைஷ்ணவீ,” “முகுந்தா,” “நாராயணி” என்றெல்லாம் மகா விஷ்ணுவே பராசக்தி ஆவாள் என்று கூறப்படுவதை எடுத்துக்காட்டுகின்றனர்.

அங்கே சங்க இலக்கியத்தில் ஆண் கடவுளாகச் சொல்லப்பட்டதும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மை. அபிராமிப்பட்டரால் பராசக்தியே விஷ்ணு ஆவாள் என்று சொல்லப்பட்டதும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மை. இருவிதக் கருத்துக்களையும் இணைத்துச் சிந்தித்துப் பார்க்கலாம்.

உருவம் இல்லாத பரம்பொருளுக்கு உருவம் கற்பித்து, அதற்குத் தத்துவார்த்தம் சொல்லும் மரபு சங்க இலக்கியங்களிலும் ஒரளவு காணப்படுவதால், திருமால் சக்கரப்படையை உடையவர் எனவும் அப்பதிற்றுப்பத்துப் பாடலில் சொல்லப்படுகிருர்.

அதே பதிற்றுப் பத்தில் திருமாலின் திருவடிகளை மக்கள் போற்றி வணங்கினர் எனக் கூறப்படுகிறது. நீலநிற விஷ்ணுவை வணங்கும் போது, பொன் நிற இலக்குமியையும் சேர்த்தே வணங்குவதாகிறது.

இந்த இடத்தில் லலிதோபாக்கியானத்தில் சொல்லப்பட்ட ஒரு கருத்தையும் சிந்தித்துப் பார்க்கலாம். அம்பிகையை உபாசிக்கக்கூடிய விதம் சொல்லப்படுகிறது. முக்தியை விரும்புகின்றவர்கள் சந்திரன் போன்று பிரகாசமான வெண்மை நிறமாக அம்பிகையைப் பாவனை பண்ணி வணங்க வேண்டும். வசீகரத்தை விரும்புகின்றவர்கள் இரத்தச் சிவப்பு நிறமாக உபாசிக்க வேண்டும். கவித்துவத்தை விரும்புகின்றவர்கள் ஸ்படிகம் போன்ற வெண்ணிறமாக வணங்க வேண்டும். தன லாபத்தை விரும்புகின்றவர்கள் பொன் நிறமாகப் பாவனை செய்து வணங்க வேண்டும். ஸர்வ சம்பத்துக்களையும் விரும்புகின்றவர்கள் சாம்பல் நிறமாக வணங்க வேண்டும். வாக்குச் சாதுர்யத்தை விரும்புகின்றவர்கள் நீலநிறமாகப் பாவனை செய்து வணங்கவேண்டும். ஸ்தம்பன சித்தியை விரும்புகின்றவர்கள் மஞ்சள் நிறமாகப் பாவனை பண்ணிப் போற்ற வேண்டும்.

சங்கநூலின்படி திருமால் ஆணுக நீலநிறம் உடையவராகச் சொல்லப்படுகிருர். அபிராமி அந்தாதியில் பராசக்தியே விஷ்ணு ஆவாள் என்றும் சொல்லப்படுகிறது. எனவே பரம்பொருளை ஆன்ருேர்கள் ஆணுகவும், பெண்ணுகவும் கருதி வழிபட்டு வந்த மரபு தொன்மையானது என்பது புலனுகிறது. “சக்திதான்

சிவத்தை ஈன்றும்" எனச் சிவஞான சித்தியார் கூறுகிறது. "தாயும் மகளும் தாரமும் ஆகுமே" எனச் சிவனே மூவரும் ஆவதைக் கூறுகிறது திருமந்திரம். "அவள் அத்தனும் (தந்தை) மகனும் தில்லையான்" எனத் திருக்கோவையார் பரம்பொருள் ஆண் பெண் ஆவதைக் குறிப்பிடு கிறது.

"காலமாய்க் காலம் இன்றிக் கருமமாய்க் கருமம் இன்றிக் கோலமாய்க் கோலம் இன்றிக் குணங்களாய்க் குணங்கள் இன்றி, ஞாலமாய் ஞாலம் இன்றி" எனக் கடவுளின் அளப்பரிய வடிவத்தைக் கந்தபுராணம் கூறுவதையும் இங்கு நினைத்துப் பார்க்கத் தகும்.

"..............வடாஅது
வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை
அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்
மரம்செல மிதித்த மாஅல் போல"

— வடதிசையில் நீர்வளம் குறையாத யமுனை ஆற்றின் மணலை உடைய பெரிய நீர்த்துறை யில், நீராடிய ஆயர்குலப் பெண்கள், குளிர்ச்சி பொருந்திய தழையை உடுத்திக்கொள்ளும் பொருட்டுத் திருமால் குருந்த மரத்தை வளைத் தான் என அகநானூறு [ *51* ] என்னும் சங்க இலக்கியம் இயம்புகிறது.

சங்க இலக்கியங்களில் சில இடங்களில் கங்கை, யமுனை முதலிய ஆறுகளைப் பற்றிய செய்திகள் வருகின்றன. நந்த வமிசம், மோரிய (மௌரிய) வமிசம் ஆகிய வமிசங்களைப்பற்றிய செய்திகளும் வருகின்றன. துவாரகை, பாடலி புத்திரம் முதலிய நகரங்களைப் பற்றிய குறிப் புக்களும் காணப்படுகின்றன.

இலக்கியங்களில் முல்லை நிலத்திற்கு முக்கி யத்துவம் கொடுத்துப் பேசப்படுகிறது. முல்லை நில மக்கள் ஆயர்கள். ஆயர்களின் வாழ்க்கை முறையையும் பெருமையுடன் பேசுகிறார்கள். முல்லை நில வாழ்க்கை முறையே முதன் முதலில் மனிதகுலத்தில் வாழ்க்கை முறையாக அமைந் தது எனவும் கூறுகிறார்கள். தொடக்க காலத் தில் மக்கள் தங்களுடைய ஆடுமாடு முதலிய கால்நடைகளுடன் விளைச்சல் நிலங்களைத் தேடிச் சென்று, விளைச்சல் இயற்கையாக அமைந்த முல்லை நிலத்தை வாழ்விடமாக அமைத்துக்கொண்டார்கள்.

"மாயோன் மேய காடுறை உலகமும்" எனத் தொல்காப்பியர் முல்லை நிலத்திற்கும், முல்லை நிலத் தெய்வமான திருமாலுக்கும் முதல் இடம் கொடுத்துள்ளார்.

**Sheperd's calender** என்னும் ஆங்கிலக் கவிதையில், தமிழ்க் கவிதையைப்போல முல்லை நிலமும், ஆயர் மக்களின் வாழ்வும் சிறப்பித்துச் சொல்லப்படுகின்றன.

ஏசுநாதரின் வாழ்வு முல்லை நிலத்தைப் பின் னணியாகக் கொண்டதே. அவரை "மேய்ப்பர்" என்கிறார்கள். ஆயர் மகளிர் நீராடிய பின்னர் தழையை அணிந்துகொள்ளும் பொருட்டுக் கண்ணன் குருந்த மரத்தினை வளைத்தது, கோபி யருடன் விளையாடிய விளையாட்டைக் குறிக் கிறது.

"அணங்குடை அவுணர் கணம்கொண்டு ஒளித் தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணது
இருள்கண் கெடுத்த பருதி ஞாலத்து
இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்
அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு"— [புற நானூறு-*174*.]

பிறருக்குத் துன்பம் செய்யும், அச்சம் தரும் அரக்கர் கூட்டத்தினர் — தேவ ருடன் சண்டையிட்டார்கள். அவ் அரக்கர்கள் சண்டையிடுவதற்கு வசதியாகப் பகலையும் இரவுபோல ஆக்கக் கருதினார்கள். அதற்காகச் சூரியனை மறைத்துவிட்டார்கள். அப்பொழுது இருட்டு உலகத்தார் கண்ணை மறைத்தது. மக்களுக்கு ஏற்பட்ட இத்துன்பத்தை நீக்கு வதற்காக அஞ்சன வண்ணனாகிய திருமால் அவ்விருட்டைப் போக்குவதற்காக, அசுரர்கள் மறைத்த சூரியனை ஆகாயத்தில் கொண்டுவந்து நிறுத்தினான்—எனச் சங்க நூலாகிய புற நானூறு கூறுகிறது.

இப்புராணக் கதையும் சங்க நூலில் இடம் பெற்றுள்ளது.

"காந்தள்அம் சிலம்பில் களிறுபடிந்து ஆங்குப்
பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்"

— காந்தள் மலர் மலர்ந்துள்ள மலையில் யானை படுத்திருப்பது போல, ஆதிசேஷனாகிய பாம் புப் படுக்கையில் திருமால் பள்ளிகொண்டுள் ளான் எனப் பெரும்பாணாற்றுப்படை [அடிகள்: *371-373*] கூறுகிறது.

பிரமன் படைப்புக் கடவுள். திருமால் காக் கும் கடவுள். சிவபெருமான் அழிக்கும் கடவுள்.

பிரமனைச் சாக்கிர மூர்த்தி எனவும், திருமாலைச் சொப்பன மூர்த்தி எனவும், சிவனைச் சுஷுப்தி மூர்த்தி எனவும் உபநிடதங்கள் கூறுகின்றன. திருமால் சாத்வீக குணமூர்த்தி.பிரமன் இராசத குண மூர்த்தி. ருத்ரன் தாமதகுண மூர்த்தி.

பாம்புப் படுக்கையில் பள்ளிகொண்டிருப்பதாகத் திருமால் சொல்லப்படுகின்றான். திருமாலுக்கு நாராயணன் என்ற பெயரும் உண்டு. நாரம் என்றால் நீர். அயனம் என்பது இடம். வடமொழிப் பாணினியின் வியாகரணப்படி நாரம் என்ற சொல்லும் அயனம் என்ற சொல்லும் இணைந்து நாராயணன் என்று ஆயிற்று. எனவே நாராயணனாகிய திருமால் திருப்பாற் கடலில் பாம்புப் படுக்கையில் ப்ள்ளிகொண்டிருக்கிறான் என்பது நாராயணன் என்ற சொல் அமைப்பால் தெரிகிறது.

"நீல் நிற உருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முகன் ஒருவன் பயந்த"

— நீலநிற வடிவத்தைக் கொண்ட நெடியவனாகிய திருமால், தனது உந்திக் கமலத்தில் இருந்து, படைப்புக் கடவுளாகிய பிரம்மனைத் தோற்றுவித்தான் எனச் சங்க இலக்கியமான பெரும்பாணாற்றுப்படை (அடி: 402-403) கூறுகிறது.

படைக்கும் கடவுளாகிய பிரம்மாவைக் காக்கும் கடவுளாகிய திருமால் தோற்றுவித்தார். பிரம்மா மைந்தன்; திருமால் தந்தை என்பது புராண மரபு. இப்புராண மரபை விட்டுவிட்டு வேறு ஒரு சிந்தனைக்கு வருவோம்.

உலகம் எவ்வாறு தோன்றியது? உயிர்கள் எவ்வாறு தோன்றின? என்ற வினாக்களை நம் முன்னோர் எழுப்பி அவ்வினாக்களுக்கு விடை கண்டனர். அவரவர்களுடைய அனுபவங்களுக்கேற்ப விடை கூறினர்.

பரம்பொருளாகிய இறைவனிடமிருந்து பல உயிர்கள் தோற்றத்திற்கு வந்தன. பரம்பொருள் பரமாத்மா; ஏனைய உயிர்கள் ஜீவாத்மாக்கள். இருக்கின்ற ஒரு பரம்பொருள் பல ஜீவாத்மாக்களாகக் காட்சிக்குப் புலனாகின்றது என ஒரு சாரார் இயம்புகின்றனர்.

பதி பசு பாசம் அனாதி. அதாவது கடவுள், உயிர், மாயை மூன்றும் அனாதி. இவை பிறர் ஒருவரால் படைக்கப்பட்டவை அல்ல; தாமே உருவானவை என்பது ஒருசாராரின் கொள்கை.

முதலில் சொல்லப்பட்ட கருத்து பரமாத்மாவே பல உயிர்களாகக் காட்சி தருகிறார் என்பது.

இரண்டாவது சொன்ன கருத்து உயிர்கள் தாமே தோன்றின; யாரும் தோற்றுவிக்கவில்லை என்பது.

எனவே இரண்டு கேள்விகள் இங்கே எழுகின்றன. உயிர்கள் யாரோ ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டனவா? இல்லை தாமே உண்டாயினவா? இதற்கு இன்றைய அறிவியல் என்ன விடை கூறுகிறது? என்பதை முதலில் பார்ப்போம்.

"இன்றைய நாளில் உயிரின வேதியியலார், [Biochemists] உயிர் இனங்களில், உயிரின் உறைவிடமாக இருப்பது டி. என். அமிலம் [D. N. A ] என்று கூறுகின்றனர். இவ் அமிலம், உயிரினங்களின் செல் [cell] அமைப்பினுள் காணப்படும் [Nucleus] நூக்ளியஸ் என்னும் பகுதியில் உள்ளது. இப்பொருள்கள் பெற்றோர்களிடமிருந்து பரம்பரையினருக்கு இனப் பெருக்கத்தின்பொழுது எடுத்துச்செல்லப்படுகிறது என்பர். இப்பொருளில் அமைந்துள்ள குறியீட்டுச் செய்தி [code] மூலம் உயிர் இனங்களில் பண்புகள் உருவாகின்றன. உயிர்ப் பொருளாகக் கருதப்படும் இதன் பகுதிப் பொருள்கள் கரிமம் [Carbon] நீர்மம் [Hydrogen] உயிர்மம் [Oxygen] நைட்ரஜன் [Nitrogen] ஆகியவை ஆகும்.

இவை கூட்டமாக இணைந்து புரதம் போன்றவைகளையும் தோற்றுவிக்கின்றன. புரதமும் டி. என். அமிலமும் இணைப்பாக உயிரின் அடிப்படையாகின்றன. இவற்றின் உருவ அமைப்பின் வேறுபாடுகளே உயிர் இனங்களிடையே காணப்படும் வேறுபாடுகளுக்குக் காரணமாகின்றன என்பார்கள். டி. என். அமிலம் உயிர் இனங்களில் "ஜீன்"களாகக் (genes) காணப்படுகிறது. இவற்றை ஆய்வுக்கூடங்களில் உருவாக்கியுள்ளனர். உயிரின் உறைவிடம் எனக் கருதப்படும் பொருள்களைச் செயற்கை முறையில் உருவாக்கும் நிலை இன்று வளர்ந்துள்ளது.

இங்கு ஒன்று நினைவில் கொள்ளல் வேண்டும். இயற்கையில் காணப்படும் பொருள்கள் தக்க சூழ்நிலையில் சேர்க்கப்பட்டனவே அன்றி

உருவாக்கப்படவில்லை என்பது அறிவியல், உயிர் நூலாரின் கொள்கையாகும்.

உயிரின் அடிப்படை என்ன என்பதைப் பின்னணியாகக் கொண்டு, அந்த அடிப்படைப் பொருள் எவ்வாறு தோன்றி இருக்கக்கூடும் என்பதையும் அதற்கான வழிமுறைகள் காலந் தோறும் எவ்வாறு விளக்கப்பட்டு வந்துள்ளன என்பதையும் பார்க்கலாம்.

தமிழ் இலக்கியத்தில் குறிப்பாகச் சமயநூல் களில் உயிரின் தோற்றம்பற்றிய குறிப்புக்கள் பல காணப்படுகின்றன.

"உயிர்கள் இறைவனுல் படைக்கப்பட்டவை எனச் சில சமயங்கள் கூறுகின்றன. பசு என்ற உயிர் அனாதி; இறைவனுல்படைக்கப்பட வில்லை என்பது சைவ சித்தாந்தக் கோட்பாடு.

பரம்பொருளை யாரும் படைக்கவில்லை ; படைக்கவும் முடியாது. அப்பரம்பொருளாகிய பரமாத்மாவே பல ஜீவாத்மாக்களாகக் காட்சி தருகின்றது என்பது வேதாந்தக் கோட்பாடு.

இவ்விரண்டு தத்துவக் கொள்கைகளில் இருந்தும் தெரிவது என்ன ? உயிர்களை யாரும் படைக்கவில்லை என்பதுதான். கடவுள் நம் மைப் படைத்தான் என்பதை உபசார வழக்கா கச் சொல்லி வருகிறோம்.

"உயிர் இல்லாத பொருள்களில் இருந்து உயிர்கள் தோன்றின" என்பது ஒரு காலத்தில் அறிவியலாரின் கருத்தாக இருந்தது. இதற்கு ஆதாரமாக இறைச்சித்துண்டுகளில் இருந்து புழுக்கள் தோன்றுவதைக் கூறினர்.

பிறகு லூயிபாஸ்டியர் போன்ற உயிர் நூல் வல்லுநர்கள், " உயிர் இல்லாப் பொருள்களில் இருந்து உயிர் தோன்ற முடியாது " என்பதைப் பல உதாரணங்களால் எடுத்து விளக்கியுள் ளார்கள்.

"சேதனத்தில் இருந்துதான் சேதனப் பொருள் தோன்ற முடியும்," என்ற தத்துவத் திற்கு இவ் அறிவியல் கருத்து ஒத்ததாக இருக்கிறது.

உயிர் நூலாரின் ஆய்வு முடிவுப்படி, உயிர் ஒரு சூழ்நிலையில் " தானாகவே தோன்றியிருக்க வேண்டும் " என்பதுதான்.

முன்பு சொன்ன கரிமப் பொருள்கள் தக்க காலத்தில், தகுதி வாய்ந்த சூழ்நிலையில் குறிப் பிட்ட சதவீதத்தில் சேர்ந்ததன் விளைவே உயிர் என்பது தற்போதைய உயிர் நூலாரின் கொள்கை.

கடலில்தான் முதன்முதலில்உயிர்கள் படைக் கப்பட்டன என்பது உயிர்நூலாரின்கொள்கை. உயிர்கள் தோற்றத்துக்கு வருகையில் முதன்முத லில் நீர்வாழ் உயிர் இனங்களே தோற்றத்துக்கு வந்தன என்பது இந்து சமயக் கோட்பாடு.

திருப்பாற்கடலை மந்த்ரமேருவைக் கொண்டு கடையும்போது ஒவ்வொரு நிலையில் வெவ் வேறுனஉயிர்கள் தோன்றின என்ற புராணக் கருத்தும் இங்கு நினைவுகூரத்தக்கது.

முதன் முதலில் தோன்றிய உயிர்கள் எனக் கருதப்படும் "வைரஸ்"கள் போன்றவற்றில் டி. என். அமிலம் புரத உறையினுல் மூடப்பட்டு எளிய அமைப்பு உடையதாக இருக்கிறது. அடுத்து ஒற்றைச் செல்லுடைய உயிர்வளி (oxygen) இன்றியே செயல்படக்கூடிய திறன் படைத்த இனங்கள் உருவாகியிருத்தல் வேண் டும்.

பிறகு தாவரங்கள் தோன்றி உயிர்வளி கொண்ட மண்டலம் உருவாக உதவின. இதன் விளைவாக உயிர்வளி கொண்டு செயல்படும் மற் றைய உயிர் இனங்கள் தோன்றலாயின. இத னையே உயிர்நூலார்," நிகழ்வாக்கம்" [பரிணாம வளர்ச்சி – Evolution ] எனக் குறிப்பிடுகின் றனர்.

" இல்லாதது தோன்ருது ; உள்ளது தோன் றும் " என்பது தருக்கநூல் கொள்கை.

எனவே, எங்கோ ஓரிடத்தில், அந்தகாரப் பெருவெளியில், கேவலாவத்தையில் செயலற் றுக் கிடக்கும் ஆன்மாவாகிய உயிர், இறைவன் திருக்கருணையாலே, அதற்கு ஏற்ற உடம்பு பெற்றுத் தோற்றத்துக்கு வருகிறது எனச் சொல்லப்படும் சமயத் தத்துவக் கருத்தும்,

ஏற்கெனவே உள்ள சில கரிமப் பொருட் களின் குறிப்பிட்ட சதவீதச் சேர்க்கையினுல் உயிர், தோற்றம் எடுக்கிறது என்ற உயிர் நூலார் கொள்கையும்,

உயிர்களைப் பிரமன் படைத்தான் என்ற புராண மரபும் சேர்த்துச் சிந்திக்கத் தக்கவை.

உயிர்களின் தோற்றம் பற்றிய சமய தத்து வக் கருத்தும், உயிர்களின் தோற்றம் பற்றிய உயிர் நூலாரின்கொள்கையும் ஒத்த இயல்பு உடையனவாக விளங்குகின்றன.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (189) *மனிதனுக்குப் பிறவி ஒன்றுதானிருக்கிறது என்பது சில மதவாதிகளின் கொள்கை. மனிதனுக்குப் பிறவிகள் பல இருக்கின்றன என்பது வேறு சில மதவாதிகளின் கொள்கை. இவ்விரண்டு கொள்கைகளுள் இறைவனுடைய திட்டத்துக்கு ஒத்தது எது?***

மனிதனுக்குப் பிறவி ஒன்று என்னும் கொள்கை யூதமதத்துக்கும், அதன் கிளைகளாக வந்துள்ள கிறிஸ்துவ மதத்துக்கும், இஸ்லாமிய மதத்துக்கும் பொதுவானது. மற்று, இந்தியாவில் தோன்றியுள்ள மதங்கள் யாவும் மனிதனுக்குப் பிறவிகள் பல என்னும் கொள்கையைக் கொண்டிருக்கின்றன. சீனுவில் தோன்றியுள்ள கன்பூஷிய மதமும் இக்கொள்கையை ஏற்றுக் கொள்கிறது.

மனிதனுக்குப் பிறவி ஒன்று என்னும் கொள்கையில் நம்பிக்கை வைத்திருக்கிறவர்கள் ஏனைய உயிர்வகைகள் தனித்தனியாகக் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டவைகள், அவைகளுக்கும் பிறவி ஒன்று என்பது அவர்களின் நம்பிக்கை.

இந்து மதத்தின் கொள்கைப்படி சிருஷ்டி முழுதும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டு இருக்கின்றன. சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிப்பது இயற்கையின் திட்டம். எண்ணரிய பிறவிகளில் கல், புல் நிலையிலிருக்கிற உயிர்வகைகள் பரிணமித்து மேல் நிலைக்கு வருகின்றன. ஸ்தாவரங்களாய் இருப்பவைகள் ஜங்கமங்களாய் மாறுகின்றன. நிலைத்திணையென்றும் இயங்கு திணையென்றும் அவைகளை இயம்புகின்றோம். பிரதிகூலமான சூழ்நிலைகளிலிருந்தும் எதிரிகளிடத்திலிருந்தும் தங்களை விடுவித்துக்கொள்ள உயிர்வகைகள் முயலுவதால் அவைகள் பிறவிகளில் மேல்நிலைக்கு வருகின்றன. விலங்குகளாக வடிவெடுத்து வந்தவைகள் பிறகு மக்களாக மாறுகின்றன. மக்கள் பிறவியின் சிறப்பு ஒன்று உண்டு. கல் போன்றும், மரம் போன்றும் அறிவற்ற நிலையிலிருக்கிற மக்களை உலகில் காணலாம். புழு, பூச்சி போன்ற வாழ்வு நடாத்துகிற மக்களையும் காணலாம். பறவைகள் போன்றும், விலங்குகள் போன்றும் இருக்கிற மக்களைப் பார்க்கிறோம். தேள், பாம்பு போன்ற பாங்குடையவர்கள் உண்டு. புலி வேங்கை போன்ற கொடுரத்தன்மைகள் வாய்ந்தவர்கள் உண்டு. மனிதனுக்குப் பிறவி ஒன்றென்றால் இந்தப் பாங்குகளைத் தாண்டி மேலாம் நிலைக்கு வருவதற்கு அவனுக்கு அவகாசமில்லை. அத்தகைய திட்டம் பொருளற்றது. பிறவிகள் பல எடுத்து ஆராய்ச்சிகள் பல செய்து படிப்படியாக மேல் நிலைக்கு வருவதுதான் பொருத்தமான திட்டமாகிறது. கீழ்நிலையிலிருந்து மேல் நிலைவரை எல்லா உயிர்களும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருக்கின்றன. கடவுள் என்னும் பேருயிரினின்றே இத்தனை கோடி உயிர் வகைகள் உருவெடுத்துப் படிப்படியாகப் பரிணமித்து மேல் நிலைக்கு வருகின்றன. இதுவே இறைவனுடைய பெருந்திட்டமாகும். இயற்கையினுடைய நடைமுறை இதற்குச் சான்று ஆகிறது. பெருநிலையை எட்டி பரம்பொருளில் ஒன்றுசேரும் வரையில் மானுடன் எண்ணிறந்த பிறவிகளை எடுத்தாகவேண்டுமென்பது கோட்பாடு.

**கேள்வி: (190) *கர்ணன் பாண்டவர்களுக்கு மூத்தவன் என்பதைத் தாய் குந்திதேவி போர் துவங்குவதற்கு முன்பு அவனிடம் போய்த் தெரிவித்தாள். அவ் உண்மையைப் பயன்படுத்தி அவன் நாட்டைப் பெற்றுத் துரியோதனனுக்குக் கொடுத்திருக்கலாமல்லவா?***

கர்ணன் பிறந்து வளர்ந்து வந்த காலமெல்லாம் தனக்குத் தாய் தந்தையர்கள் யார் என்பதை அறிந்திலன். தேர்ப்பாகனும் அவனுடைய மனைவியும் தனக்கு வளர்ப்புத் தந்தை தாய் என்பதை யூகத்தால் அவன் அறிந்திருந்தான். தன்னுடைய பரிதாபகரமான நிலையைக் குறித்து அவன் வருந்தியது கிடையாது. தன்போக்கில் தன்னுடைய வாழ்வை மேலானதாக மாற்றியமைத்து வந்தான். தற்செயலாய் துரியோதனனுக்கு உற்ற பெரிய நண்பனானான். அந்த நட்பில் அவன் ஆழ்ந்து ஊறியிருந்தான். துரியோதனனுக்காகப் போர்புரிந்து அர்ஜுனனை வெல்லுவது அல்லது போரில் மடிவது

என அவன் தீர்மானித்திருந்தான். அத்தகைய நெருக்கடியின்பொழுதுதான் குந்திதேவி வந்து அவனைப்பற்றிய வரலாற்றை அவனுக்குத் தெரிவித்தாள். அதைப்பற்றி அவன் மகிழ்ச்சியடையவில்லை. தனக்காகவென்றோ, தன்னுடைய தோழனாகிய துரியோதனனுக்காகவென்றோ அவ்வுண்மையைப் பயன்படுத்த அவன் விரும்பவில்லை. துரியோதனனுக்காக வென்று போர் புரிவதையே அவன் குறிக்கோளாகக் கொண்டிருந்தான். பெரிய பதவி ஒன்றைப் பெறுவதைவிடத் தன் நண்பனுக்கு உயிரைக் கொடுப்பதை உயர்ந்ததாக அவன் எண்ணியிருந்தான். எண்ணியபடியே செயல் புரிந்தான். துக்கத்துக்கேதுவான சூழ்நிலையிலும், துக்கப்படாதிருந்து தோழனாகிய துர்யோதனனுக்குத் தொண்டுபுரிந்து உயிரைக்கொடுத்தது அவனுடைய வீரச்செயலாகும்.

**கேள்வி: (191) நல்ல செயல்களைச் செய்ய வேண்டும் என்னும் எண்ணமிருக்கிறது. ஆயினும் உடலின் இயல்பு மனிதனைக் கெட்ட வழியிலேயே பலவந்தமாக இழுத்துச் செல்லுகிறது. அந்நிலையில் நல்ல எண்ணத்துக்குப் பலன் ஏதேனும் உண்டா?**

அறம் செய விரும்பு என்பது கோட்பாடு. மக்களுள் பலர்க்கு நலனையே புரிவதில் விருப்பமிருக்கிறது. ஆயினும் ஜன்மாந்தர வாசனையினால் உடலின் போக்கு மற்றொருவிதமாயிருக்கிறது. அதன் போக்குக்குப் பலர் அடிமைகளாகின்றனர். சிந்தனையும் செயலும் முரண்படுகின்றன. நல்ல சிந்தனை; பொருந்தாத செயல் இந்நிலையில் பலர் இருக்கின்றனர். நாளடைவில் இவர்களுடைய சிந்தனை வலிவு பெறும். உடலின் கீழாம் செயல் சோர்வு அடையும். பிறகு எண்ணம் முற்றிலும் திண்ணியதாகும்பொழுது உடலும் அதற்குட்பட்டு நடக்கும். ஆதலால் எண்ணத்தை யாண்டும் மேல்நிலையில் வைத்திருக்கிறவர்கள் நாளடைவில் திருந்தியமைந்து மேலானவர்கள் ஆவார்கள். செயலினும் சிறந்தது சிந்தனை என்பதை யாண்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

**கேள்வி: (192) ஆத்மா அழியாதது என்று உபதேசம்பெற்றுப்போரிட்ட அர்ஜுனன் அபிமன்யு இறந்தபோது ஏன் வருந்தினான்?**

அழியும் பாங்குடையது எது, அழியாதது எது என்பதை யுக்திபூர்வமாக அறிந்துகொள்ளுதல் விவேகமாகும். ஆத்மா அழியாதது. உடல் அழிந்துபோகக்கூடியது. இவ்வுண்மையைத் தெளிவுற அறிந்திருப்பவர்கள் எத்தனையோ துயரங்களினின்று தங்களை விடுவித்துக்கொள்ள முடியும். ஆயினும் துயரங்கள் அனைத்திடத்தினின்றும் தங்களை அறவே விடுவித்துக்கொள்ள முடியாது.

நெடுநாள் வாழ்ந்திருந்த பாட்டனார் உடலை உகுத்துவிட்டுப் பரகதி அடைகிறார். பேரன்மார்கள் எதிர்பார்த்திருந்தபடியே அவர் மடிந்துபோனார். ஆயினும் அவர் மரணத்தைக் குறித்து அவர்கள் கண்ணீர் சிந்தியது மானுட இயல்பு; அழாது இருப்பது விபரீதமாகும்.

உடல் எடுத்தவர்கள் எல்லாரும் ஏதேனும் ஒரு நாளில் உடலை உகுத்தாக வேண்டும். உலக நியதியை முன்னிட்டு அபிமன்யு உலகில் தனக்குப் பின்னும் வாழ்ந்திருந்து நாட்டை ஆளுவான் என்று அர்ஜுனன் எதிர்பார்த்திருந்தான். மக்கள்மீது பந்தபாசம் இருக்கலாகாதென்பதையும் அர்ஜுனன் அறிந்திருந்தான். பேராற்றல் மிகப் படைத்திருந்த அபிமன்யுவின்மீது அர்ஜுனன் புத்திர வாஞ்சை மிகப் படைத்திருந்தான். இளம் அபிமன்யுவுக்கு நாளடைவில் போர்த்திறன் ஏராளமாக வாய்க்குமென்றும் தந்தை அர்ஜுனன் எதிர்பார்த்திருந்தான். ஆனால் அவனுடைய இளம் மைந்தன் முறை தவறி மூர்க்கத்தனமாகப் போர்க்களத்தில் கொல்லப்பட்டான். அத்தகைய நெருக்கடியில் வருந்தி அழுவதுதான் மானுட இயல்பு. முன்னெச்சரிக்கை எடுத்திருந்தால் அபிமன்யுவுக்கு இந்த விபத்து வாராது தடுத்திருக்கலாம். எச்சரிக்கை எடுக்காததைக் குறித்து அர்ஜுனன் வருந்தியது முறையே. அழாதிருப்பது அறிவுடைமைக்கு அறிகுறியாகாது. அர்ஜுனன் அழுதான்; பிறகு ஒரே நாளில் மனதைத் தேற்றிக்கொண்டான். வருந்த வேண்டிய சூழ்நிலையில் வருந்துவது ஞானிக்கும் ஒவ்வும். ஞானவான்கள் உடனுக்குடனே துயரத்தைத் துடைத்துத் தள்ளுகிறார்கள். ஞானம் பெற்று வந்த அர்ஜுனனும் அதைத்தான் செய்தான். ஆதலால் அவன் அழுதது முறையே.

# சும்மா இரு

( சுவாமி துருவானந்தர் )

குழந்தையொன்று குறும்புத்தனம் செய்து கொண்டிருக்கிறது. அக்குழந்தையின் செயலைப் பொறுக்க முடியாத தாய் 'அட சும்மா இரு, உபத்திரவம் பண்ணுதே' என்று மனம் சலித்துப் பேசுகிருள். விஷமம் பண்ணுகிற குழந்தையைச் 'சும்மா இரு' என்று கூறுவது 'விஷமம் பண்ணுதே, அடங்கியிரு' என்பதற்காகக் கூறுவது.

நம் அன்ருட வாழ்க்கையில் நம் உடல் சும்மா இராது தன் போக்கில் நடந்துகொள்வதைக் காணலாம். உட்கார்ந்திருக்கும் பொழுதும் சிலர் காலை ஆட்டிக்கொண்டேயிருக்கும் பயிற்சி பெற்றுள்ளனர். காலை ஆட்டாது அவர்களால் இருக்கமுடியாது. இதனல் உடலிலுள்ள பிராணசக்தி வீணகிறது. சிலரோடு பேசிக் கொண்டிருப்பதற்கிடையில் தங்களுடைய விரல் நகங்களைக் கடித்துக் கொண்டே இருக்கும் பயிற்சி சிலர்க்கு உண்டு. விரலை வாயில் வைத்துப் பழகும் பழக்கம் சிறு குழந்தைகள் பலர்க்கு வளர்ந்துவிடுகிறது. இவைகளெல்லாம் பயிற்சியின் விளைவாக வருபவைகள். ஆனல் தீவிர முயற்சி எடுத்து ஒவ்வொருவரும் இவைகளை நிறுத்த முடியும்.

உடலை விட சூட்சுமமானது உரை. கண்ணுக்குப் புலனகும் உடலின் செயலைக் கட்டுப்படுத்துவதைவிடப் பஞ்சேந்திரியங்களில் ஒன்ருன நாவின் இயக்கத்தைக் கட்டுப்படுத்த இன்னும் அதிக முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். அதனல் மனிதன் சதா பேசும் சுபாவம் படைத்தவனக இருக்கிருன். பேசிக்கொண்டே இருக்கும் இயல்பு உள்ளவர்களுக்கு யாருடனும் பேச முடியாத சூழ்நிலை ஏற்பட்டால் அதுவே அவர்களுக்கு நரகவேதனையாக இருக்கும். ஏராளமாகப் பேசுவதன் மூலம் அதிகமான சக்தி விரயமாகிறது.

மனம் அலைகிறபொழுது அதன் விளைவாக உடலும் அசைகிறது. மனம் கட்டுப்படுத்தப்பட்டால் அதன் விளைவாக உடலும், பஞ்சேந்திரியங்களும் கட்டுப்படுத்தப்படும். மனமடங்கியிருப்பவர்கள் யாண்டும் சாந்த ஸ்வரூபமாகக் காட்சி அளிப்பார்கள். அவர்களிடமிருந்து ஓரிரண்டு வார்த்தைகள் வாங்குவதே சிரமம். எத்தகைய நெருக்கடியிலும் அவர்கள் மனம் தடுமாறுவதில்லை. பரமஹம்சரின் நேர் சிஷ்யர் சுவாமி சாரதானந்தர் ஒருசமயம் சிலரோடு படகில் போய்க்கொண்டிருந்தார். கங்கையில் ஏற்பட்ட கொந்தளிப்பால் படகு இங்குமங்கும் அசைந்து நீரில் மூழ்கிவிடுவதுபோல் காட்சியளித்தது. அப்பொழுது அப்படகிலிருந்த பயணிகள் பீதியடைந்து படகில் நாலாபக்கமும் ஓடலாயினர். ஆனல் சாரதானந்த சுவாமிகள் மட்டும் அசையாது ஓரிடத்தில் அமர்ந்திருந்தார். அங்ஙனம் அவர் அசையாது இருப்பதைக் கண்ணுற்ற சிலர் வெகுண்டு "நாங்களெல்லாம் இங்ஙனம் ஓடிக்கொண்டிருக்கும்போது நீர்மட்டும் ஏன் இங்கே பொம்மைபோல உட்கார்ந்துகொண்டு இருக்கிறீர்?'' என்றனர். அதற்குச் சுவாமிகள் சாந்தமாக "நீங்கள் எல்லாரும் அங்கும் இங்கும் ஓடி மேலும் குழப்பத்தை உண்டுபண்ணுகிறீர்கள். ஆகவே நானும் ஏன் அங்குமிங்கும் ஓடிக் குழப்பத்தை உண்டுபண்ணவேண்டும்?" என்ருர். மனமடங்கியிருப்பவர்களுக்கே அறிவுத் தெளிவு ஏற்படும். பதை பதைப்பே உருவானவர்களுக்கு எதையும் நிதானமாகச் சிந்திக்கும் தன்மை போய்விடுகிறது.

சும்மா இருக்கத் தெரிந்தவன்தான் சுகமாக இருப்பான். சுகத்தை, ஆனந்தத்தை அடையத்தான் எல்லா உயிர்களும் பாடுபட்டு வருகின்றன. துன்பம் கலவாத இன்பமே நமது நிஜநிலை. அதை எல்லாரும் உணரும் பொருட்டே அயர்ந்த உறக்கத்தை இறைவன் நமக்கு அளித்துள்ளான். உறக்கத்தை விரும்பாத உயிர்கள் உண்டா? கனவற்ற ஆழ்ந்த உறக்கத்தில் ஒவ்வொருவனும் தன்னுடைய ஜீவவியக்தியை மறக்கிருன். ஏழை, பணக்காரன், கற்றவன், கல்லாதவன் என்ற உபாதிகள் விலகி ஆத்ம சொருபத்தில் இருக்கிருன். அயர்ந்த உறக்கத்தில் ஆனந்தமாக இருப்பதற்குக் காரணம் மனமடங்கியிருப்பதே. ஏழு எட்டு மணிநேரம் போனது கூடத் தெரியாது ஆழ்ந்து உறங்கி ஆனந்தத்தை அனுப

வித்தவர் ஒவ்வொருவரும் உண்டு. இதை விழிப்பு நிலைக்குக்கொண்டு வந்தால், யாண்டும் மனமடங்கி தெய்விக எண்ணத்திலே இருந்தால் இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்கிற நிலையாகிய அனுபூதி வாய்க்கிறது. புசித்தவனுக்குப் பசி அடங்குவது போன்று மனதிலுள்ள விருத்திகள் ஒடுங்குகிறபொழுது சொரூப ஆனந்தம் நமக்குச் சொந்தமாகிறது. அக்னி எங்ஙனம் உஷ்ண சொரூபமோ அது போன்று நாம் ஆனந்த சொரூபம்.

மனமடங்கிய நிலையில் அகங்காரமில்லை. ஆங்கு ஆனந்தம்மட்டுமே எஞ்சியிருக்கிறது. சிவனுர் முயலகன் என்ற அசுரன் மீது கால் வைத்து நடனமாடுவதாகச் சித்திரம் வரையப்பட்டுள்ளது. அந்த அசுரன் அகங்காரத்தின் சின்னம். குழந்தைகளுக்கு நிகர் ஞானிகள். அவர்களிடம் ஜீவபோதம் முற்றிலும் போய்ப் பரபோதமே எஞ்சியுள்ளது.

துறவு வாழ்வில் ஈடுபட்ட சிலர் சமூகத்திலிருந்து விலகி மக்களோடு ஒரு தொடர்பும் கொள்ளாது குகையில் அமர்ந்து தியானம், ஜபம் பழகுகிறுர்கள். அவர்களால் நாட்டுக்கு என்ன பிரயோஜனம் என்று பலர் எண்ணக் கூடும். விவேகானந்த சுவாமிகளுக்கும் இந்த ஐயம் ஏற்பட்ட காலமுண்டு. பவஹாரிபாபா என்ற ஒரு யோகியைப்பற்றிக் கேள்வியுற்று அவரைப் பார்க்க விவேகானந்தர் சென்றுர். உலகுக்குத் தன்னைப்பற்றி விளம்பரப்படுத்தாது குகையில் வாழ்ந்த அந்த மகானேடு சம்பாஷித்தார். அவரோடு சம்பாஷித்ததிலிருந்து அவரைக் குறித்து உயர்ந்த மதிப்புப் போட்டார் சுவாமிகள். அவரடைந்த பெரு நிலையை உணர்ந்த சுவாமிகள் அவரிடம் வினவினுர். "மக்களோடு தொடர்பு வைத்துப் பெரும் செயலாற்றுவதை விடுத்து இங்ஙனம் குகையில் பதுங்கியிருந்து மக்களுக்கு எங்ஙனம் உயர்ந்த நலனைச் செய்துவிட முடியும்?" என்று கேட்டார். "உலக மக்களோடு தொடர்புவைத்துத் தான் நலன் எதையும் செய்யமுடியும் என்று நீ நினைக்கிறுயா?" என்றுர் பவஹாரிபாபா. உலகோடு தொடர்பு இல்லாமல் அவர்கள் எண்ணுகிற எண்ணங்கள் தகுந்த சாதகர்களைத் தேடிப் பிடித்து அவர்கள் மூலம் பெரும் காரியம் நடைபெற்றுவிடும் என்ற உண்மை விவேகானந்தருக்கு உடனே புலப்பட்டது. சான்றேர்கள் எண்ணுகிற எண்ணங்கள் அவர்கள் மறைந்த பிறகும் அழிவதில்லை. அந்த எண்ணங்களை நிறைவேற்ற வந்தவர்கள்தாம் ராமன், கிருஷ்ணன், புத்தர், ஏசு போன்றவர்கள். ஆக உலகுக்குத் தங்களை மறைத்து வைத்த சான்றேர்களே தலையானவர்கள். இரமணமகரிஷி பேசாதிருந்தாலும் அவரைக் காண உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் தகுதியானவர்கள் வந்து அருள் பிரசாதம் பெற்றுச் சென்றனர்.

தாயுமானவருடைய குரு ஒரு மௌனி. தாயுமானவரிடம் இரு சந்தர்ப்பங்களில் மட்டும் திருவாய் மலர்ந்தருளினுர். சிஷ்யருக்கு ஞான வேட்கை ஏற்பட்டபொழுதும் தீட்சை பண்ணும்பொழுதும் 'ஓம் நமசிவாய' என்றுர். சிஷ்யரைவிட்டு குரு பிரியும் நிலை வந்தபோது சிஷ்யரிடம் 'சும்மா இரு' என்று ஆணையிட்டார். அதை மூலமந்த்ரமாக வைத்துக்கொண்டுஏராள மான பாடல்களைப் பாடினுர் தாயுமானவர். 'சும்மா இரு' என்ற கருத்தின் பொருள் ஒவ்வொருபாடலிலும் ஏதேனும் ஒருவிதத்தில்இடம் பெற்றிருப்பதைப் படிப்பவர்கள் காணலாம்.

'சும்மா இரு' என்ற ஆப்த மொழிக்கு ஆதர்ஷ புருஷராக இருப்பவர் தக்ஷிணமூர்த்தி.

திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளியுள்ள தக்ஷிண மூர்த்தியைத் தாயுமானவரும் தமிழ்ப் பாடலால் பாடித் தம் பரம குருவுக்கு இங்ஙனம் வணக்கம் செலுத்துகிறுர்.

துங்கமிரு பக்குவச் சனகன் முதன்முனிவோர்கள்
தொழுது அருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியை ஒரு சொல்லாலுணர்த்தியே
சொரூபாநுபூதி காட்டிச்
செங்கமல பீடமேற் கல்லாலடிக்குள் வளர்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயானந்த குருவே.

குருவானவர் இளமை பொருந்தியவர். சிஷ்யர்கள் நால்வரோ முதியவர்கள். மௌனமாக அமர்ந்திருக்கிறுர் குரு. அவரைப் பார்த்தமாத்திரத்தில் சிஷ்யர்களின் சந்தேகங்கள் தாமாக நீங்கின. குருவருளும், திருவருளும் கூடுகிறபோது சும்மா இருக்கும் நிலை எல்லார்க்கும் வருகிறது. அந்நிலை நம் எல்லார்க்கும் கிட்ட யாண்டும் திருவருளைச் சார்ந்திருப்போமாக.

# குறிப்புகள்

( சுவாமி ஸதானந்தர் )

**மக்களுக்கு நல்லறிவு புகட்டுதல்**

அரசியல் மேடைகளில் பேசுபவர் 'பொது மக்களே' என்று அன்புடன் விளிக்கிறுர். சட்ட சபைகளில் 'பொதுமக்களின் நலன்' என்று கருணையுடன் வாதாடப்படுகிறது. இந்தப் பொதுமக்கள் யார்? ஜனதிபதி முதல் கூலிக் காரன்வரை இந்திய மக்கள் அனைவரும் அதில் அடங்குகிறுர்கள். விலை ஏற்றத்தினல் மக்கள் அவதிப்படுகிறுர்கள் என்று கருணையுள்ள அர சியல்வாதி பேசும்போது தன்னை விட்டுவிட்டு மற்றவர்களைப்பற்றிப் பேசுவதுபோன்று தென் படுகிறது. ஆனல் பொதுமக்கள் என்ற சொல் லில் மக்கள் அனைவரையும் குறிக்கலாம்.

பொதுமக்கள் என்கிற சொல் ஒரு மந்திரம் போன்று எல்லா அரசியல்வாதிகளின் வாயி லும் உச்சாரணை செய்யப்பட்டு வருகிறது. அதை ஜபிக்க ஜபிக்க, அந்த மந்திரத்தின் தேவதைக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகிவிடு கிறது. அத்தேவதை அவன் பக்திக்கு மெச்சித் தன் ஓட்டு என்னும் வரத்தைக் கொடுக் கிறது. ஆனல் அவனே தேவதையின் தலை யிலேயே, வரம் பலிக்கிறதா என்று கை வைத் துப் பார்க்க ஆரம்பிக்கிறுன். அந்தத் தேவ தையோ பக்தனிடம் சிக்கித் தவிக்கிறது. அந் தத் தவிப்பை மறக்கச் செய்யவும் அவனுக்கு வழிதெரியும். மந்திரசக்தி வாய்ந்த சில சுலோ கங்கள் அவனுக்குத் தெரியும். "எல்லாரும் இந்நாட்டு மன்னர்; ஏழையின் சிரிப்பில் கட வுளைப் பார்; ஏழைகளுக்கு வீடு; கடன் தள்ளு படி; அடகுப் பொருள் இல்லாமல் கடன்; உழுதவனுக்கே நிலம்" என்பன செவியில் பட்ட வுடன் அந்தத் தேவதையின் முகம் மகிழ்ச்சியி ஞல் பிரகாசிக்கிறது; தன் வேதனையை மறந்து விடுகிறது.

ஆடு நனைகிறதென்று ஓநாய் கவலைப்பட்ட கதையும், ஐயோ நாளைக்கு இக்குளத்தில் உங் கள் அனைவரையும் வலைபோட்டு பிடித்துவிடப் போகிறுர்கள். அங்ஙனம் பேசி முடித்துப் போயுள்ளார்கள் என்று மீன்களுக்காகக் கண் ணீர் விட்ட கொக்கைப்பற்றிய கதையும் எல்லா ருக்கும் தெரியும். ஷேக்ஸ்பியர் எழுதியுள்ள ஜூலியஸ் சீசர் என்கிற நாடகத்தில் அதிகாரப் போட்டி எப்படி உருவாகும், அதில் ஈடுபடுப வர்கள் எத்தகையவர்களாக இருப்பார்கள், நல்லவர்களையும்கூட அது கொடிய செயல் களைச் செய்யத் தூண்டிவிடும், பொதுமக்கள் எடுப்பார் கைப்பிள்ளையாக இருக்கிறுர்கள், அவர்கள் தீர்க்க சிந்தனை அற்றவர்கள், அல்ப அறிவு படைத்தவர்கள், கேட்பதெல்லாம் அவர் களுக்குச் சரிதான் என்று தோன்றும், அவர் களைத் தன்வயப்படுத்துவது எப்படி என்றெல் லாம் பிரத்யக்ஷமாக எழுதியுள்ளார். முன்னூறு வருஷங்களுக்கு முன்பு இங்கிலாந்தில் இருந் தது போன்று இன்றும் இங்கும், எங்கும் அர சியல் வாதிகள், பொதுமக்களின் போக்கு அப்படியேதான் இருந்துவருகிறது. அரசியல் வாதியைப்பற்றி **"The politician is the worst scoundrel of the society"** என்று பெர்னட்ஷா சொன்னர். பொதுமக்களைப்பற்றி **Fodder for cannon** என்றுமேல்நாட்டு அறிஞர் ஒருவர் சொன்னர். பெரியோர்கள் அவ்வப்போது இவ்வுண்மையை எடுத்துக் காட்டிக்கொண்டு தான் இருக்கிறுர்கள். ஆயினும் அரசியல்வாதி யின் ஆடம்பரமும், பிதற்றுதலும், ஏமாற்றுத லும், பொதுமக்கள் ஏமாறுதலும் அப்படியே தான் நடந்து வருகிறது.

வால்மீகி ராமாயணத்தில் அயோத்தி மக்கள் எப்படி இருந்தார்கள் என்று பாலகாண்டம் 6 வது சர்க்கம் 6 வது சுலோகம் முதல் 18 வது சுலோகம் முடிய வருகிறது:— "அந்தச் சிறந்த பட்டணத்தில் சந்தோஷமுடையவர்கள், தர்மாத் மாக்கள், சாஸ்திரங்களை அறிந்தவர்கள், தங்கள் தங்கள் பொருள்களைக்கொண்டு திருப்தி அடைந் தவர்கள், லோபமற்றவர்கள், சத்தியமே பேசுபவர்கள் வாழ்ந்தார்கள். அந்த உத்தம மான பட்டணத்தில் அல்பமான வீரமுடைய வனும், பசு, குதிரை, தனம், தான்யம் இவை இல்லாதவனுமான குடும்பி ஒருவனும் இல்லை. காமி அல்லது அல்ப குணமுள்ளவன் அல்லது அருவருப்பான தோற்றமுள்ள புருஷன் அயோத்தியில் ஓரிடத்திலும் பார்க்க முடியாது. பண்டிதனல்லாதவன் இல்லை. நாஸ்திகனும்

இல்லை. எல்லா ஆடவர்களும், மகளிர்களும் தர்மஸ்வபாவமுடையவர்களான அவையடக்க முடையவர்களான சீலத்தோடு கூடிய நிர்மல மான மகரிஷிகள் போன்றவர்கள். குண்டல மில்லாதவன் இல்லை. மகுடமில்லாதவன் இல்லை. மாலை இல்லாதவன் இல்லை. போக மில்லாதவன் இல்லை. பரிசுத்தமற்றவன் இல்லை. பூச்சு இல்லாத தேகமுடையவன் இல்லை. நன்றாகப் புசியாதவன் இல்லை. கொடுக்காத வன் இல்லை. தோள்வளைகளையும் ஹாரங்களை யும் தரியாதவன் இல்லை. இந்திரியங்களை அடக்காதவனும் காணப்படவில்லை. அயோத்தி யில் நித்தியம் ஹோமம் செய்யாதவன் ஒரு வனாவது இல்லை. யாகம் பண்ணாதவன் இல்லை. அற்பன் இல்லை. திருடன் இல்லை. வர்ணசாரமற்ற விவாஹம் செய்பவனும் இல்லை. பிராம்மணர்கள் எப்போதும் தங்கள் காரியத்தில் கருத்துள்ளவர்கள். அடக்கப் பட்ட இந்திரியங்களை உடையவர்கள். தானம் அத்யயனம் இவைகளை ஸ்வபாவமாக உடைய வர்கள். ஏற்பதில் அடக்கமுள்ளவர்கள். பொய் பேசுபவன் இல்லை. அசூயை உடையவன் இல்லை. சக்தியற்றவன் இல்லை. ஹிதமில்லா தவன் இல்லை. கொடுக்காதவன் இல்லை. தீன னும், வியாகுல மனமுடையவனும், பிணியால் வருந்துகிறவனும் இல்லை. அரசனிடத்தில் பக்தி இல்லாதவன் இல்லை. நான்கு வர்ணங் களில் எல்லா மனிதர்களும் தேவதை அதிதி இவர்களைப் பூஜிக்கிறவர்கள், நன்றியுள்ளவர் கள், சூரர்கள். தர்மத்தையும் சத்தியத்தையும் நன்கு ஆச்ரயித்தவர்கள். க்ஷத்திரியர்கள் பிராம் மணர்களை அனுசரித்தார்கள். வைசியர்கள் க்ஷத்திரியர்களை அனுசரித்தார்கள். சூத்திரர்கள் மூன்று வர்ணத்தார்களையும் உபசரித்தார்கள். அவரவர்கள் தர்மத்தில் பற்றுடையவர்களாவர்.”

இதைப் படிக்கும்போது எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகிறது. இதை வெறும் கற்பனை என்றும் சொல்லிவிடலாம். ஆனால் நல்லவர்கள் அதிகம் இருந்த காலம் இருந்திருக்கிறது என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். அது நல்லஆட்சியின் மூலமாகவே ஏற்படமுடியும். அதில் வர்ணித் துள்ள சரீரஅழகு, அலங்காரம், வாசனைத்திரவி யம், கல்வி சம்பந்தப்பட்டவரை இன்றும் அம் மாதிரி இருக்கிறதென்று சொல்லலாம். அதை விட ஒருபடி அதிகமாகவே கடிகாரம், டிரான் ஸிஸ்டர் கூட இன்று இருக்கின்றன. ஆனால், அந்தோ, அதில் வர்ணிக்கப்பட்டுள்ள நற் குணங்கள் இன்று சிறந்து விளங்கவில்லையே! நீதி, நேர்மை, அறநெறி, ஆகியவற்றைப் புறக்கணித்த நிலையில் இன்று நம் சமூக வாழ்க்கை இருக்கிறது. அதனால் நம் சமய அனுஷ்டானங்கள், ஆலயங்கள், திருவிழாக் கள், சாஸ்திரங்கள் எல்லாம் வெறும்பாசாங்கு, போலி, ஆடம்பரம் என்று ஆகிவிட்டன. அவைகள் மக்கள் உள்ளத்தில் சன்மார்க்க உணர்வை நிலைபெறச் செய்யும் சக்தியை இழந்து விட்டனவா? இதற்குக் காரணம் என்ன?

அயோத்தி மன்னன் தசரதன் உத்தமன், வீரன், கல்விமான், பக்திமான், நீதிமான். முனி வர்கள் சொற்படி ஆட்சிசெய்து வந்தான். அவன் முன்னோர்கள் வழிவழியாகப் போற்றத்தக்க சீலமும், தர்மானுஷ்டானமும் உள்ளவர்கள். ‘அரசன் எவ்வழி மக்கள் அவ்வழி’ என்பது பழ மொழி. பற்றற்ற, முற்றும் துறந்த முனிவர்கள் வழிகாட்டியபடி க்ஷத்திரிய பலம் இயங்கிய தால் அன்று செல்வச் சிறப்புடன் குணநலனும் சேர்ந்து மிளிர்ந்தன. இன்றைய நிலைமை வேறு. இராவணன், ஹிரண்யகசிபு போன்ற அரக்கர் களின் ஆட்சி போன்று இன்று உள்ளது. இராவணன் ஆட்சியில் அரக்கர்களுக்கு நன்மை, தேவர்களுக்குக் கொடுமை. ஹிரண்ய கசிபு ஆட்சியில் கடவுள் வழிபாடு, யாகம், வேள்வி, நன்மையான அனைத்தும் புறக் கணிக்கப்பட்டு ஹிரண்யாய நம: என்று சொல்லும்படி நிர்ப்பந்தப் படுத்தப்பட்டார் கள். துர்யோதனன், துச்சாதனன், சகுனி, கர்ணன் ஆகியவர்கள் ராஜசபையில், பீஷ்மர், துரோணர், விதுரர், மற்றும் மதிப்பிற்குரிய முதிய ராஜ பிரமுகர்கள் முன்னிலையில் திரௌ பதிக்குச் செய்த அநீதியைப்பற்றி மஹா பாரதத்தில் படிக்கிறோம். அன்று சூதாடி ஒரு ராஜ்யத்தைச் சுவாதீனப்படுத்த முடிந்தது. வெறும் வாய்ப்பேச்சின் சாமர்த்தியத்தாலேயே ஆட்சியைக் கைப்பற்ற முடிகிற கலியுகம் அன்றோ இது! பாண்டவர்களின் அக்ஞான வாசத்தின்போது திரௌபதியைக் கீசகன் பலாத்காரமாய் இழுத்தான். அவள் அவனை

உதறித் தள்ளிவிட்டுச்சபாமண்டபம் பக்கம் ஓடி வந்தாள். "அரசனிடமா போகிருய். அவன் என்ன செய்துவிடுவான்? உண்மையில் நானே விராடதேசத்துஅரசன்'' என்றுகத்திக்கொண்டு பின்தொடர்ந்து ஓடி வந்து கூந்தலேப் பிடித்து இழுத்துத் தள்ளிக் காலால் உதைத்தான். அப்போது தர்மபுத்திரரும், விராடனும் அங்கு இருந்தார்கள். அது போன்ற சூழ்நிலேயில் இன்று நாம் இருக்கிரேம். ஆட்சி தர்மம் நீதி ஆகியவற்றிற்கு உட்பட்டதாக இல்லே. அரசாங்கத்தைச் சான்ரேர் ஏற்கவில்லே. சான்ரேர் ஆலோசனேப்படியும் அரசாங்கம் நடக்கவில்லே.

அரசாங்க அமைப்பு சமூகத்துக்குத் தேவை. சமூகத்தின் பொது விஷயங்கள், பாதுகாப்பு இவைகள் அப்போதுதான் நன்கு நிறைவேறும். ஒரு முக்கோணத்தில் மூன்று பக்கங்கள் இருப்பது போல, அரசாங்கத்தில் ஜனநாயகம், முடியாட்சி, சர்வாதிகாரம் என மூன்று இருக்கின்றன. எது பரிபூரணமான நன்மையானது, எது அதிகம் கேடு உள்ளது என்று சொல்ல முடியாது. மூன்று அமைப்புக்களிலும் நன்மை தீமைகள் கலந்துள்ளன. ஒன்று ஆரம்பத்தில் நல்லதாகத் தோன்றும். போகப் போக அதில் கெடுதல்கள் புகுந்துவிடும். ஒரு அமைப்பு சமூகத்துக்கு அதிகம் தீமையாக, சாபக்கேடாக ஆகும்போது வேறு அமைப்பு இயல்பாக வந்து அமைகிறது. ஜனநாயகம் பழுதடையும்போது சர்வாதிகாரம் புகும். அது நாளடைவில் முடியரசாகும். முடியரசு கொடுங்கோல் ஆட்சியாகும்போது குடியரசு புகும். இப்படியே காலமெல்லாம் நடந்து வந்துள்ளது. சரித்திரத்தில் இவ்வுண்மைகளேப் பார்க்கலாம். அதிகாரம், ஐசுவர்யம், அந்தஸ்து, செல்வாக்கு, கீர்த்தி, இப்படி மனதைக் கெடுக்கக்கூடிய உபாதிகள், கவர்ச்சிகள், பல இருப்பதால் அரசியல் அமைப்பு போட்டிமிக்கதாய், அதைக் கைப்பற்ற கொடிய செயல்களேயும் செய்யத் தூண்டுவதாய் இருக்கிறது. தேச நன்மை, மக்கள் நன்மை, என்பனவெல்லாம் வெறும் பிதற்றல்கள்; அரசியல்வாதியின் வாய்ஜாலம்,மக்கள்மனதை மயக்கித் திசை திருப்பச் செய்யும் சொற்கள். ஜூலியஸ் சீஸர் நாடகத்தில் அரசியல்வாதியின் இக்குணம் மிகவும் அழகாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. நாடகத்திலும் சரித்திரத்திலும் பார்ப்பதென்ன! நமக்கு நேரிடையாகவே தெரிந்த விஷயம் தானே. கெடுதல்களேத் தவிர்ப்பதற்கு வழி என்ன ?

தேசத்தின் புண்ணிய வசத்தால் யாரோ சில நல்ல அரசர்கள் வாய்க்கிருர்கள். அவர்கள் காலத்தில் பல துறைகளிலும் நல்லார் உருவாகிருர்கள். அவர்கள் அரசியலில் பங்கு பெறுகிருர்கள். தேசத்தின் சூழ்நிலேயும் அமைதியும் நன்மையும் வாய்ந்ததாக இருக்கிறது. அப்போது தேசம் அயோத்தியைப் பற்றிய வர்ணனே போன்று அமைகிறது. பெரும்பாலான காலம் போட்டி, பொருமை, சண்டை சச்சரவுகளில் கழிகிறது. நல்லபாம்பு விஷமுள்ளது என்று எல்லாருக்கும் தெரியும். மின்சாரம் எப்படி ஆபத்தானது என்று எல்லாருக்கும் தெரியும். அதனுல் அவைகளிடத்தில் நாம் எச்சரிக்கையாக நடந்துகொள்கிரேம். அதே போன்று இன்று மக்களிடத்தில் அரசியலேப் பற்றி அக்ஞானம், மோகம் இருக்கிறது. ஐம்பது வருஷங்களுக்கு முன்பு நம்மை ஆளுபவர் யார், உலக நடைமுறை எப்படி இருக்கிறது, நாம் முன்னேற்றமடைய என்ன செய்யவேண்டும் என்கிற ஞானம் பொது மக்களுக்கு இல்லே. அது ஒருவித அறியாமை. இன்ரே அரசியல்வாதி பாமரனுடைய தெய்வமாகிவிட்டான். அவனுல்தான் எல்லா நன்மைகளும், சீர்திருத்தங்களும், வரப்பிரசாதங்களும் செய்ய முடியும் என்று நம்பிக்கொண்டிருக்கிருர்கள். இது ஒருவித அறியாமை. அவன் பதவிக்கு வரப்பாடுபட்டவர்கள் எல்லாரும் அவனேச் சேர்ந்தவர்கள் ஆகிருர்கள். நீதி, நேர்மையைப் புறக்கணித்துவிட்டு,மானம் மரியாதை இன்றி வெட்கமில்லாமல் தன் சுயநல காரியங்களுக்குப் பதவியில் அமர்ந்திருப்பவன் தயவை நாடுகிருர்கள். பதவியில் உள்ளவனே, நல்லவனுக இருந்தாலும், எத்தனே கோரிக்கைகளேத்தான் புறக்கணிக்க முடியும்! நாள் ஏறஏறஅவனும் கொடிய சுயநலக்காரன் ஆகிவிடுகிருன். சிறுகச் சிறுகப் பதவி ஆசை வந்து விடுகிறது. பிறகு அதை நிறைவேற்றிக் கொள்ள கெட்ட வழியிலும் முயலுகிருன். அரசியல் இப்படிப்பட்ட சாக்கடை என்று தெரிந்திருந்தால் அதில் எச்சரிக்கையாக நடந்து கொள்ளலாம் அல்லவா? பத

விக்கு வருபவன் உண்மையான தேசபக்தி, மக்கள் நன்மையில் கருத்துடையவனாக இருக்க வேண்டும். ஓட்டுரிமையுள்ளவர்கள் விஷயம் தெரிந்து ஓட்டுப் போடவேண்டும். யார் வேண்டுமானாலும் பதவிக்கு நிற்கலாம் என்பதும், வயது வந்தவர்களுக்கெல்லாம் ஓட்டு உரிமை என்பதும் மாறவேண்டும். வயது, படிப்பு, பண்பு, சேவை மனப்பான்மை ஆகியவற்றை அளவைகளாகக் கொண்டு பதவிக்கு ஆள் பொறுக்கவேண்டும். ஆட்சிப் பொறுப்பை ஏற்க ஆள் பொறுக்கும் உரிமையும் பரவலாக இருக்கலாகாது. இதன் விளைவுதான் இன்றைய சீர்கேட்டுக்கெல்லாம் காரணம். வாழ்க்கையில் அடிபட்டால் அன்றி, அனுபவப்பட்டால் அன்றி, காரியங்களை நிர்வகிக்கும் திறமை, நல்லது கெட்டதை முன்கூட்டியே யோசிக்கும் திறமை வராது. ஏழையின் கண்ணீரைத் துடைக்கிறேன் என்று சொல்லி இன்னொரு பக்கம் சட்டத்தின் காலடியின் கீழ்மிதிபட்டுமற்றொருவனைக் கண்ணீர்வடிக்க வைக்கவேண்டியதில்லை.மக்களிடமுள்ள அரசியல் மோகம் விலகுவதாகுக. எதற்கெடுத்தாலும் அரசாங்கத்தின் உதவியை நாடும் பழக்கம் போவதாகுக. அவரவர் ஜீவனோபாயத்தை அவரவரே தேடிக் கொள்வார்களாக. நீதி, தர்மம், அறநெறி இவைகளைக் கடைப்பிடிப்பார்களாக. குற்றமில்லாததே இல்லை. எல்லாவற்றையும் குற்றமுள்ளவை, தீயவை என்று தள்ளி விடவும் முடியாது. அதற்கு ஒரு பரிகாரம் அல்லது மாற்று ஏற்பாடு இல்லாமல் அனைத்தையும் குற்றம் சொல்லுதலும் புறக்கணித்தலும் தகாது. அரசியலில் உள்ள குற்றங்களுக்கெல்லாம் ஒரே பரிகாரம் அறநெறியை, நீதியை, தர்மத்தை அனைவரும் கடைப்பிடித்தலே ஆகும்; பற்றை, சுயநலத்தைத் துடைத்துத் தள்ளுதலே ஆகும். பிரபஞ்ச சாகரத்தினின்று ஈடேற வேண்டுமானால் அதில் முதலில் மிதக்க வேண்டும், பிறகு நீந்த வேண்டும். அறநெறியைக் கடைப்பிடித்தல் மிதப்பதற்கு நிகர். அதற்குமேல் சமய அனுஷ்டானம் கடக்கும் சக்தியாக உதவுகிறது. ஆகையால் அறவாழ்வும், அருள் நாட்டமும் நம் தேசத்தின் உயிர் நாடி. அறவாழ்வும் அருள் நாட்டமும் கொண்டவர்களாக மக்கள் அனைவரும் இருக்கவேண்டும்.

---

# செய்திகள்

**நிகழ்பவை**

*19–2–79* திங்கட்கிழமையன்று சேலம் ஜில்லா மேட்டூர் தாலுகா சின்னத்தண்டாவிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண குருகுல உயர்நிலைப்பள்ளியினர் நடத்தும் ஸ்ரீ இராமகிருஷ்ணர் ஜயந்தி விழாவில் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** கலந்துகொள்வார்கள்.

*25–2–79* ஞாயிற்றுக்கிழமை மகாசிவராத்திரியாகும். அன்று குருகுலமாணவர்கள் உபவாசமிருந்து இருபத்து நான்கு மணி நேரம் அகண்ட நாம பஜனை செய்வார்கள்.

*28–2–79* புதன்கிழமை ஸ்ரீ ராமகிருஷ்ணர் திதிபூஜையாகும். அன்று குருகுல மாணவர்கள் இருபத்துநான்கு மணி நேரம் அகண்ட நாம பஜனையும், பகல் *11-00* மணி முதல் *12-00* மணிவரை ஐக்கிய வனக்கமும் செய்வார்கள்.

*4–3–79* ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சதேவரின் ஜயந்தி விழா தபோவனத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படும். அன்று காலை *6-00* மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரின் திரு உருவப்படத்தைத் திருப்பராய்த்துறை சிவ ஆலயத்திற்கு நாம பஜனையுடன் குருகுலமாணவர்கள் ஊர்வலமாக எடுத்துச் செல்வார்கள். அன்று காலை *9-00* மணிக்குக் குருகுல மாணவர்களின் பெற்றோர் கூட்டம் ஸ்ரீவிவேகானந்த வித்யாவன உயர்நிலைப் பள்ளியில் நடைபெறும்.

மார்ச்சு மாதம் 6, 7, 8 ஆகிய மூன்று தினங்களிலும் தபோவனத்தில் மூன்று நாள் அந்தர் யோகம் நிகழும். இது சம்பந்தமான விபரங்களை இம் மாதத்தர்ம சக்கரம் அட்டை இரண்டாம் பக்கம் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றும் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரண்டாம் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
அனுஷ்டான வேதாந்தம் ... 3-00
எதிர்கால இந்தியா ... 3-00
தினசரி தியானம்-பதினொன்காம் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00

**தாயுமானவர் இயற்றிய**
பரிபூரணானந்தம் விரிவுரை ... 3-00
சின்மயானந்த குரு ஷை ... 3-00
ஆனந்தமானபரம் ஷை ... 3-00
சுகவாரி ஷை ... 3-00
மௌனகுரு வணக்கம் ஷை ... 3-00
எங்கும் நிறைகின்றபொருள் ஷை ... 2-50
கருணாகரக்கடவுள் ஷை ... 2-00
பரசிவ வணக்கம் ஷை ... 1-00

விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
பஜனைப் பாடல்கள் ... 1-50
சந்நியாசி ... 1-25
குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
இராவண தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) ... 1-00
தானவீரன் கர்ணன் ... 1-00
பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் ... 1-00
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80

நன்மக்களைப் பெறுதல் ரூ. ... 0-80
பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ... 0-80
ஆத்ம சக்தி ... 0-75
பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறை வணக்கம் ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
*மனிதனது நிஜசொரூபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
சைவன் யார்? ... 0-50
கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
நன்னெறிகளும் அருள்வாக்குகளும் ... 0-40
வர்ணாச்ரம தர்மம் ... 0-30
அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
The Bhagavad Gita (9th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 8-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (DELUXE) ... 4-50
Daily Divine Digest Ordinary ... 2-50
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of Vivekananda (with plastic cover) ... 4-00
Sri Vishnu Sahasranama Stotram ... 4-00
The Bhagavad Gita (Small Size) (With plastic cover) ... 3-00
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

**தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-25ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.**

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

# அந்தர்யோக விவரங்கள்

**சென்னையில் 18—2—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: புரசவாக்கம் சர் M.C.T. முத்தய்யா செட்டியார் பெண்கள் உயர்நிலைப்பள்ளி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**ராமநாதபுரம் ஜில்லா—அருப்புக்கோட்டையில் 18—2—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: S. B. K. மகளிர் மேல்நிலைப்பள்ளி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி குஹானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—வேலூரில் 18—2—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ வெங்கடேஸ்வரா மேல்நிலைப்பள்ளி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 18—2—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 11—3—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த ஆஸ்ரமம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரு 1-00ம், மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**திருநெல்வேலி ஜில்லா—பாளையங்கோட்டையில் 11—3—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: பெருமாள் கிழக்கு ரத வீதி M. மனகாவலம்பிள்ளை கல்யாண மண்டபம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—பள்ளத்தூரில் 11—3—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ சாரதா சேவாச்ரமம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி குஹானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—சாத்தூரில் 11—3—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: எட்வர்டு ஆண்கள் உயர்நிலைப்பள்ளி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.